# தேவாரம்.

## திருவிருத்தம்-பண்-கொல்லி. ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பாளையுடைக்கமுகோங்கிப் பன்மாடநெருங்கியெங்கும்
வாளையுடைப்புனல்வந்தெறி வாழ்வயற்றில்லைதன்னு
ளாளவுடைக்கழற்சிற்றம்பலத் தாடல்கண்டாற்
பீளையுடைக்கண்களாற்பின்னைப் பேய்த்தொண்டர்காண்ப
தென்னே

பொருவிடையொன் றுடைப் புண்ணியமூர்த்திப் புலியதள
னுருவுடையம்மலைமங்கை மணாளனுலகுக்கெல்லாந்
திருவுடையந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்
திருவடியைக்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்ப
தென்னே.

தொடுத்தமலரொடுதூபமுஞ்சாந்துங்கொண்டெப்பொழு
மடுத்துவணங்குமயனொடுமாலுக்குங்காண்பரியான்
பொடிக்கொண்டணிந்துபொன்னாகியதில்லைச்சிற்றம்பலவ
னுடுத்ததுகில்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே

ஊனத்தைநீக்கியுலகறிய வென்னையாட்கொண்டவன்
தேனொத்தெனக்கினியான் றில்லைச்சிற்றம்பலவனெங்கோன்
வானத்தவருய்யவன்னஞ்சை யுண்டகண்டத்திலங்கு
மேனத்தெயிறுகண்டாற்பின்னைக் கண்கொண்டுகாண்ப
தென்னே.

அருக்குமிகுத்துத்தன்றோள் வலியுன்னித்தடவரையை
வரைக்கைகளாலெடுத்தார்ப்ப மலைமகள்கோன்சிரித்து
வரக்கன்மணிமுடிபத்து மணிதில்லையம்பலவன்
நெருக்கிமிதித்தவிரல்கண்ட கண்கொண்டுகாண்பதென்னே

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கருநட்டகண்டனையண்டத் தலைவனைக்கற்பகத்தைச்
செருநட்டமும்மதிலெய்ய வல்லானைச்செந்தீமுழங்கத்
திருநட்டமாடியைத்தில்லைக் கிறைவனைச் சிற்றம்பலத்துப்
பெருநட்டமாடியைவானவர்கோனென்றுவாழ்த்துவனே.

## தேவாரம்.

அரும்பற்றப் படவாய் மலர்கொண்டுநீர்
கரும்பற்றப் படத்தூவித் தொழுமினோ
கரும்பற்றச் சிலைக்காமனைக் காய்ந்தவன்
பெரும்பற்றப் புலியூரெம் பிரானையே.

அல்லலென்செயு மருவினையென்செயுந்
தொல்லைவல்வினைத் தொண்டன்றனென்செயுந்
தில்லைமாநகர்ச் சிற்றம்பலவனார்க்
கெல்லையில்லதோ ரடிமைபூண்டேனுக்கே.

நாரணனும் பிரமனென்றிவர்
தேடியுந் திரிந்துங் காணவல்லரோ
மாடமாளிகை சூழ்தில்லையம்பலத்
தாடகம்மன்னினைக் கனிநக்கவே.

மதுரவாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம்பலவன் திருமலை
யதிரவார்க்க மரக்கன் முடிபத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே.

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்குறுந்தொகை. ௫-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பனைக்கைமும்மத வேழமுரித்தவ
னினைப்பவர் மனங்கோயிலாக்கொண்டவ
னனைத்துவேடமா மம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும் மறந்துய்வனே.

தீர்த்தனைச் சிவனைச் சிவலோகனை
மூர்த்தியைமுதலாய வொருவனைப்
பார்த்தனுக்கருள்செய்த சிற்றம்பலக்
கூத்தனைக் கொடியேன் மறந்துய்வனே.

மாணிபாற்கறந் தாட்டி வழிபட
நீணுலகெலா மாளக் கொடுத்தவ
ஞானியைச் செம்பொனம்பலத் துண்ணின்ற
தாணுவைத் தமியேன் மறந்துய்வனே.

ழுதும்வானுலகத்துளதேவர்க
டாழுதும்போற்றியுந்தூயசெம்பொன்னி
லழுதிமேய்ந்தசிற்றம்பலக்கூத்தனை
ழைதயேன்மறந்தெங்ஙனமுய்வனே. ௯

ருமால்வரையேந்தலுற்றான்சிரம்
ங்கவிட்டுமுறவூன்றியதாளினான்
தங்குநீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனைப்
ரங்கிலாத்தொண்டனேன்மறந்துய்வனே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

பெரியதிருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை யருமறையினகத்
யணுவையார்க்குந், தெரியாத தத்துவனைத் தேனைப்
திகழொளியைத் தேவர்கடங்கோனை மற்றைக், கரி
நான்முகனைக் கனலைக்காற்றைக் கனைகடலைக் குல
யைக்கலந்துநின்ற, பெரியானைப்பெரும்பற்றப்புலியூரா
பேசாதநாளெல்லாம் பிறவாநாளே. ௧

ருந்துணையை யடியார்த மல்லறீர்க்கு மருமருந்
ஞாலத்தகத்துட்டோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும்
ம் விட்டு வான்புலன்க ளகத்தடக்கி மடவாரோடும்,
ருந்தணைமேல் வரும்பயனைப்போகமாற்றிப் பொதுநீக்
ந்தனைநினையவல்லோர்க்கென்றும், பெருந்துணையைப்பெ
பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

காரொளிய திருமேனிச் செங்கண்மாலுங் கடிக்கமலத்
ருந்தயனுங் காணாவண்ணஞ், சீரொளிய கழற்பிழம்பாய்
ற்றொல்லைத் திகழொளியைச் சிந்தைதனை மயக்கந்தீர்
5, மேரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு மேழுல
கடந்தண்டத்தப்பாலைநின்ற, பேரொளியைப்பெரும்பற்ற
லியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## புக்கதிருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மங்குன்மதிதவழுமாடவீதி மயிலாப்பிலுள்ளார் துள்ளார், கொங்கிற் கொடுமுடியார் குற்றாலத்தார் மூக்கிலுள்ளார்போய்க் கொள்ளம்பூதூர்த், கங்குலி யார் சாலநாளார் தருமபுரத்துள்ளார் தக்களூரார், பொ ங்குவெண்ணீறணிந்து பூதஞ்சூழப் புலியூர்ச் சிற்றம்பல புக்கார்தாமே.

காரார்கமழ்கொன்றைக் கண்ணிசூடிக் கபால யேந்திக்கணங்கள்பாட, வூராரிடும்பிச்சைகொண்டுழலு மராய்நின்ற வொருவனார்தாம், சீரார்கழல்வணங்குந் தேவர்திருவாரூர்த்திருமூலட்டானமேயார், போரார் யேறிப்பூதஞ்சூழப்புலியூர்ச் சிற்றம்பலமேபுக்கார்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி நாயனார்.

பண் - குறிஞ்சி. எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடுமடிமைக்கணன்றியே மனனேநீவாழுநா ளிடுக்காட்டித் தருமனார் தமர்செக்கிலிடும்போது தடுத்தாட் கொள்வான், கடுத்தாடுங்கரதலத்திற் றமருகமுமெரியகலுங் கரியபாம்பும், பிடித்தாடிப் புலியூர்ச் சிற்றம்பலத்தெம்பெரு மானைப்பெற்றாமன்றே.

பேராது காமத்திற்சென்றார்போ லன்றியே பிரியா துள்கிச், சீரார்ந்தவன்பராய்ச் சென்றுமுன் னடிவீழுந்திரு வினரை, யோராததருமனார் தமர்செக்கிலிடும்போது தடுத் தாட்கொள்வான், பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்பெ ருமானைப் பெற்றாமன்றே. உ

முட்டாத முச்சந்தி மூவாயிரவர்க்கு மூர்த்தியென்னப், பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார்பாவமும் வினையும் போக, விட்டானை மலையெடுத்த விராவணனைத் தலைபத்து நெரியக்காலாற், றொட்டானைப் புலியூர்ச்சிற்றம் பலத்தெம் பெருமானைப் பெற்றாமன்றே. ௩

ரூருமரவல்குலுமைநங்கை யவள்பங்கன்பைங்கணே
ரூரன்றருமனூர் தமர்செக்கிலிடும்போது தடுத்தாட்
ளூரன்றம்பிரா னூரன் மிகோங்கிலணிகா
பேரூர்பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே
ன்றே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# உ. திருவேட்களம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-தக்கராகம். க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ரதியுமாகியவண்ணலாரமுலைக்கையமர்ந்திலங்க
வமியம்ப மலைமகள் காண நின்றாடிச்
குநகுதலைகங்கை தண்மதியம்மயலேதழப்ப
ண்ணீறு மெய்பூசும் வேட்கள நன்னகராரே. க

டதனைத்தாழ்தலுமேறமுடித்துச்சங்கவெண்டோடு
கப், புடைதனிற் பாரிடஞ் சூழப்போதருமாரிவர்
ருடைதனினல்ஹற்கோவணவாடை யுண்பது
சை வெள்ளை, விடைதனையூர்தி நயந்தார் வேட்கள
ரே. உ

ணியன்மாடம்விளங்கொளிவீதிவெண்கொடி
லெங்க, நண்ணியசீர்வளர்காழிநற்றமிழ்ஞான சம்
பண்ணினல்லாளொடுபாகமமர்ந்துபேணியவேட்
மனமொழிந்த, பண்ணியல்பாடல்வல்லார்கள் பழி
ரடுபாவமிலரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு நாயனார்.

திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நன்று நாடொறு நம்வினைபோயறு
மென்று மின்பந்தழைக்க விருக்கலாஞ்
சென்று நீர்திருவேட்களத்துள்ளுறை
துன்று பொற்சடையானைத் தொழுமினே.

கருப்பு வெஞ்சிலைக்காமனைக் காய்ந்தவன்
பொருப்பு வெஞ்சிலை யாற்புரஞ்செற்றவன்
விருப்பன்மேவிய வேட்களங்கைதொழு
திருப்பனாகி லெனக்கிடரில்லையே.

சேடனுறையுஞ்செழுமாமலை
யோடியாங்கெடுத் தான்முடிபத்திற
வாடவூன்றி மலரடி வாங்கிய
வேடனுறை வேட்களஞ் சேர்மினே.

திருச்சிற்றம்பலம்.

---

## ௩. திருநெல்வாயில்.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

**பண்-இந்தளம். ௨-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

புடையினார் புள்ளிகால்பொருந்திய
மடையினார் மணிநீர் நெல்வாயிலார்
நடையினால் விரற் கோவணந் நயந்
துடையினாரெமதுச்சியாரே.

வாங்கினார் மதிண் மேற்கணை வெள்ளந்
தாங்கினார் தலையாய தன்மையர்
நீங்குநீர நெல்வாயிலார் தொழ
வோங்கினாரெமதுச்சியாரே.

நெண்பயங்கு நெல்வாயிலீசனைச்
சண்பைஞான சம்பந்தன் சொல்லிவை
பண்பயன் கொளப் பாடவல்லவர்
விண்பயன் கொளும் வேட்கையாளரே.

திருச்சிற்றம்பலம்.

---

# ௪. திருக்கழிப்பாலை.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

பண் - கௌசிகம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெந்தகுங்கிலியப்புகை விம்மவே
கந்தநின்றலருங் கழிப்பாலையா
ரந்தமும் மளவும் மறியாததோர்
சந்தமாலவர் மேவிய சாந்தமே. ௧

வானிலங்க விளங்கு மிளம்பிறைத்
தானலங்க லுகந்த தலைவனார்
கானிலங்க வருங்கழிப் பாலையார்
மானலம்மட நோக்குடை யாளொடே. ௨

அந்தண்காழி யருமறை ஞானசம்
பந்தன்பாய்புனல் சூழ கழிப்பாலையைச்
சிந்தையாற் சொன்ன செந்தமிழ் வல்லவர்
முந்திவானுலகாளன் முறைமையே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு நாயனார்.

திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஊனுடுத்தி யொன்பது வாசல் வைத்து வொள்ளெலும்பு தூணாவுரோமமேய்ந்து, தாமெடுத்த கூரைதவிரப்போவார் தயக்கம்பல படைத்தார் தாமரையினார், கானெடுத்து மாமயில்களாலுஞ் சோலைக்கழிப்பாலை மேயகபாலப்பனார், வானிடத்தை யூடறுத்து வல்லைச்செல்லும் வழிவைத்தார்க் கவ்வழியே போதுநாமே. ௧

விண்ணப்பவிச்சாதரர்களேத்தவிரிகதிரானெரிசுடரான் விண்[illegible], பண்ணப்பன் பத்தர்மனத்துளேயும்பசுபதி பா[illegible]மூர்த்தி, கண்ணப்பன் கண்ணப்பக்கண்டுகந்தா[illegible]மேயகபாலப்பனார், வண்ணப்பிணிமாயயாக்கை[illegible]வைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. ௨

பிணம்புல்குபீறற் குரம்பை மெய்யாப் பேசப்படுகின்
பேதைமீர்கா, ணிணம்புல்குசூலத்தர்நீலகண்டரெண்டோள
ரெண்ணிறைந்தகுணத்தினாலே, கணம்புல்லன்கருத்துகந்தார்
காஞ்சியுள்ளார்கழிப்பாலை மேயகபாலப்பனார், மணம்புல்கு
மாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுமாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி நாயனார்.

பண் - நட்டராகம். எ ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

செடியேன்றீவினையிற்றடுமாற்றங் கண்டாலு
மடியானை வெறுத்தொழிக நகவாமே
முடிமேன்மாமதியும் மரவும்முடன்றுயிலும்
வடிவேதாமுடையார் மகிழுங்கழிப்பாலையதே.

எங்கேனுமிருந் துன்னடியேனுனைநினைந்தா
லங்கேவந்தென்னொடு முடனாகி நின்றருளி
யிங்கே யென்வினையை யறுத்திட்டெனை யாளுங்
கங்காநாயகனே கழிப்பாலை மேயானே

பழிசேரில் புகழான் பரமன் பரமேட்டி
கழியார் செல்வமல்குங் கழிப்பாலை மேயானைத்
தொழுவானாவலர் கோனாரூரனுரைத்த தமிழ்
வழுவாமாலை வல்லார் வானோருலகாள்பவரே

திருச்சிற்றம்பலம்.

---

# ௫. திருநல்லூர்ப் பெருமணம்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

பண் - அந்தாளிக்குறிஞ்சி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கல்லூர்ப்பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப்பெருமணம் பாட்டு மெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப்பெருமண மேயநம்பானே. ௧

தருமணலோதஞ்சேர் தண்கடனித்திலம்
பருமணலாக்கொண்டுபாவைநல்லார்கள்
வருமணங்கூட்டிமணஞ்செயுநல்லூர்ப்
பெருமணத்தான்பெண்ணோர்பாகங்கொண்டானே. ௨

தக்கிருந்தீரன்றுதாளாலரக்கனை
யுக்கிருந்தொல்கவுயர்வரைக்கீழிட்டு
நக்கிருந்தீரின்றுநல்லூர்ப்பெருமணம்
புக்கிருந்தீரெமைப்போக்கருளீரே. ௮

நறும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்
பெறும்பதநல்லூர்ப்பெருமணத்தானை
யுறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க்
கரும்பழிபாவமவலமிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௬. திருமகேந்திரப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

திரைதருபவளமுஞ்சீர்திகழ்வயிரமுங்
கரைதருமகிலொடுகனவளைபுகுதரும்
வரைவிலாலெயிலெய்தமகேந்திரப்பள்ளியு
ளரவரையழகனையடியிணைபணிமினே. ௧

சந்திரன்கதிரவன்றகுபுகழயனொடு
மிந்திரன்வழிபடவிருந்தவெம்மிறையவன்
மந்திரமறைவளர்மகேந்திரப்பள்ளியு
ளந்தமில்லழகனையடிபணிந்துய்ம்மினே. ௬

வம்புலாம்பொழிலணிமகேந்திரப்பள்ளியு
ணம்பனார்கழலடிஞானசம்பந்தன்சொ
ணம்பரமிதுவெனநாவினானவில்பவ
ரும்பராரெதிர்கொளவுயர்பதியணைவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# எ. தென்றிருமுல்லைவாயில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பியந்தைக்காந்தாரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

துளிமண்டியுண்டுநிறம்வந்தகண்டனடமன்னுதுன்னுசுடரோன், ஒளிமண்டியும்பருலகங்கடந்தவுமைபங்கனெங்களரனூர், களிமண்டுசோலைகழனிக்கலந்தகமலங்கடங்குமதுவிற், றெளிமண்டியுண்டுசிறைவண்டுபாடுந் திருமுல்லைவாயிலிதுவே.

ஒன்றொன்றொடொன்றுமொருநான்கொடைந்துமிருமூன்றொடேழுமுடனா, யன்றின்றொடென்றுமறிவானவர்க்குமறியாமைநின்றவரனூர், குன்றொன்றொடொன்றுகுலையொன்றொடொன்றுகொடியொன்றொடொன்றுகுழுமிச், சென்றொன்றொடொன்றுசெறிவாய்நிறைந்த திருமுல்லைவாயிலிதுவே.

அணிகொண்டகோதையவணன்றுமேத்தவருள்செய்தவெந்தைமருவார், திணிகொண்டமூன்றுபுரமெய்தவில்லிதிருமுல்லைவாயிறன்மேற், றணிகொண்டசிந்தையவர்காழிஞான மிகுபந்தனொண்டமிழ்களி, வல்லார்கள்பத்துமிசைபாடிபத்தராகவ்வானமாள்வர்மிகவே. கக

திருச்சிற்றம்பலம்.

# அ. திருக்கலிக்காமூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழம்பஞ்சுரம். ந-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மடல்வரையின்மதுவிம்முசோலைவயல்சூழ்ந்தழகாருங்
கடல்வரையோதங்கலந்துமுத்தஞ்சொரியுங்கலிக்காமூ
ருடல்வரையினுயிர்வாழ்க்கையாயவொருவன்கழலேத்த
விடர்தொடராவினையானசிந்துமிறைவனருளாமே. க

மைவரைபோற்றிரையோடுகூடிப்புடையேமலிந்தோதங்
கைவரையால்வளர்சங்கமெங்குமிருக்குங்கலிக்காமூர்

மெய்வரையான்மகள்பாகன்றன்னைவிரும்பாவுடல்வாழ்
மைவரையாராறுத்தாளுமென்பரதாவுஞ்சூரதமே. ௰

ஆழியஞாஞ்சூரமுதாரவுண்டன்றமரர்க்கமுதுண்ண
ஆழிதொறுமுவராவளித்தானுலகத்துயர்கின்ற
காழியுண்ஞானசம்பந்தன்சொன்னதமிழாற்கலிக்காழூர்
வாழியெம்மானைவணங்கியேத்தமருவாபிணிதானே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# ௯. திருச்சாய்க்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

**பண் - சீகாமரம். உ-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங்கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே. க

நீநாளுநன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந்தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளுநவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. ௩

வையநீரேற்றானு மலருறைவு நான்முகனு
மையன்மாரிருவர்க்கு மளப்பரிதா லவன்பெருமை
தையலார்பாட்டோவாச் சாய்க்காட்டெம் பெருமானைத்
தெய்வமாப் பேணாதார் தெளிவுடைமை தேறோமே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

**திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

வானத்திளமதியும் பாம்புந்தன்னில் வளர்சடைமேலா
தரிப்பவைத்தார்போலுந், தேனைத்திளைத்துண்டுவண்டுபா
டுந் தில்லைநடமாடுந்தேவர்போலு, ஞானத்தொண்சுடராய்

நின்றார்போலு நன்மையுந்தீமையுமானார்போலுந், தேனைத்
தடியார்க் கினியார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ்
செல்வர்தாமே. க

விலையிலாவாரஞ்சேர் மார்பர்போலும் வெண்ணீறு
மெய்க்கணிந்த விகிர்தர்போலும், மலையினார்மங்கைகோனார்
போலுமாற்பேறுகாப்பாய் மகிழ்ந்தார்போலுந், தொலைவி
லார்புரமூன்றுந்தொலைத்தார்போலுஞ்சோற்றுத்துறைதரு
த்தியுள்ளார்போலுஞ், சிலையினார்செங்க ணரவர்போலுந்
திருச்சாய்காட்டினிதுறையுஞ்செல்வர்தாமே. அ

திருச்சிற்றம்பலம்.

---

# க0. திருப்பல்லவனீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பழம்பஞ்சுரம் - ஈரடி. உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பரசுபாணியர்பாடல்வீணையர்பட்டினத்துறைபல்லவனீச்ச
ரத்தீசுபாணிநின்றாரிவர்தன்மையறிவாரார். [ரத் க

பட்டநெற்றியர்நட்டமாடுவர்பட்டினத்துறைபல்லவனீச்ச
திட்டமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [ரத் உ

பல்லிலோட்டினர்பலிகொண்டுண்பவர்பட்டினத்துறைபல்ல
தெல்லியாட்டுகந்தாரிவர்தன்மையறிவாரார். [வனீச்சரத் ரு

பச்சைமேனியர்பிச்சைகொள்பவர்பட்டினத்துறைபல்லவ
இச்சையாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [னீச்சரத் கூ

பாதங்கைதொழவேதமோதுவர்பட்டினத்துறைபல்லவனீச்
தாதியாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [சரத் அ

வானமாள்வதற்கூனமொன்றிலைமாதர்பல்லவனீச்சரத்தானை
ஞானசம்பந்தனற்றமிழ்சொல்லவல்லவர்நல்லரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௧. திருவெண்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

**பண் - சீகாமரம் ௨-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

கண்காட்டுநுதலானுங்கனல்காட்டுங்கையானும்
பெண்காட்டுமுருவானும்பிறைகாட்டுஞ்சடையானும்
பண்காட்டுமிசையானும்பயிர்காட்டும்புயலானும்
வெண்காட்டிலுறைவானும்விடைகாட்டுங்கொடியானே. ௧

பேயடையாபிரிவெய்தும்பிள்ளையினோடுள்ளநினை
வாயினவேவரம்பெறுவரையுறவேண்டாவொன்றும்
வேயனதோளுமைபங்கன்வெண்காட்டுமுக்குளநீர்
தோய்வினையாரவர்தம்மைத்தோயாவாந்தீவினையே ௨

சக்கரமாற்கீந்தானுஞ்சலந்தரனைப்பிளந்தானு
மக்கரைமேலசைத்தானுமடைந்தயிராவதம்பணிய
மிக்கதனுக்கருள்சுரக்கும்வெண்காடுவினைதுரக்கு
முக்குளநன்குடையானுமுக்கணுடையிறையவனே. ௭

தண்பொழில்சூழ்சண்பையர்கோன்றமிழ்ஞானசம்பந்தன்
விண்பொலிவெண்பிறைச்சென்னிவிகிர்தனுறைவெண்காட்
பண்பொலிசெந்தமிழ்மாலைபாடியபத்திவைவல்லார் [
மண்பொலியவாழ்ந்தவர்போய்வான்பொலியப்புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

**திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

தூண்டுசுடர்மேனித்தூநீறாடிச் சூலங்கையேந்தியோர்
ழல்வாய்நாகம், பூண்டுபொறியரவங்காதிற்பெய்துபொற்
சடைகளவைதாழப்புரிவெண்ணூலர், நீண்டுகிடந்திலங்குதிங்
கள்சூடி நெடுந்தெருவேவந்தெனது நெஞ்சங் கொண்டார்,
வேண்டுநடைநடக்கும் வெள்ளேறேறி வெண்காடுமேவிய
விகிர்தனாரே. ௧

தென்னலையோ ரோடேந்திப் பிச்சைக்கென்று வந்தார்க் குலங்கேதென்றில்லைபுக்கே, னங்கிலேயேநிற்கின்றாரையங் கொள்ளாரருகேவருவார்போலேநோக்குகின்றார், நங்கிலைமை யேதோநம்மூர்தானேதோவென்றேனுக்கொன்றாகச்சொல் லமாட்டார், மென்முலையார்கூடிவிரும்பியாடும் வெண்காடு மேவியவிகிர்தனாரே. ௫

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். ஏ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

படங்கொணாகஞ் சென்னிசேர்த்திப்பாய்புலித்தோலரையில்
அடங்கலாரூரெரியச்சீறியன்றுமூவர்க்கருள்புரிந்தீர் [வீக்கி
மடங்கலானைச்செற்றுகந்தீர்மனைகடோறுந்தலைகையேந்தி
விடங்கராகித்திரிவதென்னேவேலைசூழ்வெண்காடனீரே. ௧

இழித்துகந்தீர்முன்னைவேடமிமையவர்க்குமுரைகள்பேணா
தொழித்துகந்தீர்நீர்முன்கொண்டவுயர்தவத்தையமரர்
வழிக்கவந்தகாமவேளையவனுடையதாதைகாண [வேண்ட
விழித்துகந்தவெற்றியென்னேவேலைசூழ்வெண்காடனீரே. ௨

[illegible]க்கமேவேதமோதவல்லோர்வேலைசூழ்வெண்காடுமேய
விருத்தனையவேதன்றன்னைவிரிபொழிற்றிருநாவலூர
னருத்தியாலாரூரன்றொண்டனடியன்கேட்டமாலைபத்துந்
தெரித்தவண்ணமொழியவல்லார்செம்மையாளர்வானுளாரே

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௨. திருக்காட்டுப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

செய்யருகேபுனல்பாயவோங்கிச்செங்கயல்பாயச்சிலமலர்த்தேன், கையருகேகனிவாழையீன்றுகானலெலாங்கமழ் காட்டுப்பள்ளிப், பையருகேயழல்வாயவைவாய்ப்பாம்பணை

யான்பணைத்தோளிபாக, மெய்யருகேயுடையானையுள்கினின்
டவரேறுவர் மேலுலகே க

தோலுடையான்வண்ணப் போர்வையினான் சுண்ண
வெண்ணீறுதுதைந்திலங்கு, நூலுடையானிமையோர்பெரு
மானுண்ணறிவால்வழிபாடுசெய்யுங், காலுடையான்கரிதா
யகண்டன்காதலிக்கப்படுங்காட்டுப்பள்ளி, மேலுடையானி
மையாதமுக்கண்மின்னிடையாளொடும்வேண்டினனே. ௪

பொன்னியன்றமரைநீனெய்தல் போதுகளாற்பொலி
வெய்துபொய்கைக், கன்னியர்தாங்குடைகாட்டுப்பள்ளிக்கா
தலனைக்கடற்காழியர்கோன், துன்னியவின்னிசையாற்று
தைந்துசொல்லியஞானசம்பந்தனல்ல,தன்னிசையாற்சொன்
னமாலைபத்துந்தாங்கவல்லார்புகழ்தாங்குவரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# கரு. திருக்குருகாவூர்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

பண் - அந்தாளிக்குறிஞ்சி. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்ணீறணிமார்பிற்றோல்புனைந்
தெண்ணரும்பல்கணமேத்தநின்றாடுவார்
விண்ணமர்பைம்பொழில்வெள்ளடைமேவிய
பெண்ணமர்மேனியெம்பிஞ்ஞகனாரே. க

திரைபுல்குகங்கைதிகழ்சடைவைத்து
வரைமகளோடுடனாடுதிர்மல்கு
விரைகமழ்தண்பொழில்வெள்ளடைமேவிய
வரைமல்குவாளரவாட்டுகந்தீரே. உ

காவியங்கண்மடவாளொடுங்காட்டிடைத்
தீயகலேந்திநின்றாடுதிர்தேன்மலர்
மேவியதண்பொழில்வெள்ளடைமேவிய
வாவினிலேந்துகொண்டாட்டுகந்தீரே. ங

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி நாயனார்.

பண் - நட்டராகம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

இத்தனையாமாற்றையறிந்திலேனெம்பெருமான்
பித்தரேயென்றும்மைப்பேசுவர்பிறரெல்லா
முத்தினைமணிதன்னைமாணிக்கமுளைத்தெழுந்த
வித்தனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே. ௧

பாடுவார்பசிதீர்ப்பாய்பரவுவார்பிணிகளைவா
யோடுநன்கலனாகவுண்பலிக்குழல்வானே
காடுநின்னிடமாகக்கடுவிருணட்டமாடும்
வேடனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே. ௨

பண்ணிடைத்தமிழொப்பாய்பழத்தினிற்சுவையொப்பாய்
கண்ணிடைமணியொப்பாய்கடுவிருட்சுடரொப்பாய்
மண்ணிடையடியார்கண்மனத்திடர்வாராமே
விண்ணிடைகுருகாவூர்வெள்ளடைநீயன்றே ௩

வளங்கனிபொழின்மல்குவயலணிந்தழகாய
விளங்கொளிகுருகாவூர்வெள்ளடையுறைவானை
யிளங்கிளையாரூரன்வனப்பகையவளப்ப
னுளங்குளிர்தமிழ்மாலைபத்தர்கட்குரையாமே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௪. திருப்பிரமபுரம்

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென்னுள்ளங்கவர்கள்வ
னேடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. ௧

முற்றலாமையிளநாகமோடேனமுளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகலனாப்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்

கற்றல்கேட்டலுடையார்பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே.

நீர்பரந்தநிமிர்புன்சடைமேலோர்நிலாவெண்மதிசூடி
யேர்பரந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வ
னூர்பரந்தவுலகின்முதலாகியவோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. ௧0

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை [௯
யொருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

திருவிருக்குக்குறள்-பண் - குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அரனையுள்குவீர், பிரமனூருளெம்
பரனையேமனம், பரவியுய்ம்மினே. ௧

காணவுள்குவீர், வேணுநற்புரத்
தாணுவின்கழல், பேணியுய்ம்மினே. ௨

நாதனென்பிர்காள், காதலொன்புக
லாதிபாதமே, யோதியுய்ம்மினே. ௩

அங்கமாதுசேர், பங்கமாயவன்
வெங்குருமன்னு, மெங்களீசனே. ௪

வாணிலாச்சடைத், தோணிவன்புரத்
தாணிநற்பொனைக், காணுமின்களே. ௫

பாந்தளார்சடைப், பூந்தராய்மன்னு
மேந்துகொங்கையாள், வேந்தனென்பரே. ௬

கரியகண்டனைச், சிரபுரத்துளெம்
மரசைநாடொறும், பரவியுய்ம்மினே. ௭

நறவமார்பொழிற், புறவநற்பதி
யிறைவனாமமே, மறவனெஞ்சமே. ௮

தென்றிலரக்கனைக், குன்றிற்சண்பைம
னன்றுசெறித்தவா, நின்றுநினைமினே. ௯

அயனுமாலுமாய், முயலுங்காழியான்
பெயல்வையெய்திநின், றியலுமுள்ளமே. ௧௦

தேரரமணரைச், சேர்வில்கொள்கைமன்
னேரில்கழுமனினைந், தோருமுள்ளமே. ௧௧

தொழுமனத்தவர், கழுமலத்துறை
பழுதில்சம்பந்தன், மொழிகள்பத்துமே ௧௨

திருச்சிற்றம்பலம்.

---

பண் - சீகாமரம். ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

எம்பிரானெனக்கமுதமாவானுந் தன்னடைந்தார்
தம்பிரானாவானுந் தழலேந்துகையானுங்
கம்பமாகரியுரித்தகாபாலிகறைக்கண்டன்
வம்புலாம்பொழிற்பிரமபுரத்துறையும்வானவனே. ௧

நன்னெஞ்சேயுனையிரந்தேனம்பெருமான்றிருவடியே
யுன்னஞ்செய்திருகண்டாயுய்வதனைவேண்டுதியே
லன்னஞ்சேர்பிரமபுரத்தாரமுதையெப்போதும்
பன்னுஞ்சீர்வாயதுவேபார்க்கண்ணேபரிந்திடவே. ௫

எங்கேனுமியாதாகிப்பிறந்திடினுந்தன்னடியார்க்
கிங்கேயென்றருள்புரியுமெம்பெருமானெருதேறிக்
கொங்கேயுமலர்ச்சோலைக்குளிர்பிரமபுரத்துறையுஞ்
சங்கேயொத்தொளிர்மேனிச்சங்கரன்றன்றன்மைகளே. ௬

திருச்சிற்றம்பலம்.

---

## வேணுபுரம்.

பண் - நட்டபாடை. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வண்டார்குழலரிவையொடும் பிரியாவகைபாகம்
பெண்டான்மிக வானான்பிறைச் சென்னிப்பெருமானூர்
தண்டாமரை மலராளுறை தவளந்நெடுமாடம்
விண்டாங்குவபோலும்மிகு வேணுபுர மதுவே ௧

படைப்புந்நிலையிறுதிப்பயன் பருமையொடுநேர்மை
கிடைப்பல்கண முடையான்கிரி பூதப்படையானூர்
புடைப்பாளையின் கமுகின்னொடு புன்னைமலர்நாற்றம்
விடைத்தேவரு தென்றல்மிகு வேணுபுர மதுவே. ௨

வேதத்தொலி யானும்மிகு வேணுபுரந் தன்னைப்
பாதத்தினின்மனம் வைத்தெழு பந்தன்றன பாட
லேதத்தினை யில்லாவிவை பத்தும்மிசை வல்லா
கேதத்தினையில்லார்சிவ கதியைப்பெறுவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பூந்தராய்.

பண் - காந்தாரபஞ்சமம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பந்துசேர்விரலாள்பவளத்துவர்வாயினாள்பனிமாமதிபோல்
தந்தமில்புகழாண்மலைமாதொடுமாதிப்பிரான் [முகத்,
வந்துசேர்விடம்வானவரெத்திசையுந்நிறைந்துவலஞ்செய்து
புந்திசெய்திறைஞ்சிப்பொழிபூந்தராய்போற்றுதுமே. [மாமலர்

காவியங்கருங்கண்ணினாள்கனித்தொண்டைவாய்க்கதிர்
முத்துநல்வெண்ணகைத், தூவியம்பெடையன்னநடைச்சுரி
மென்குழலா,டேவியுந்திருமேனியோர்பாகமாயொன்றிரண்
டொருமூன்றொடுசேர்பதி, பூவிலந்தணனொப்பவர் பூந்தராய்
போற்றுதுமே. ௨

தேம்பனுண்ணிடையாள்செழுஞ்சேலன கண்ணியோ
டண்ணல்சேர்விடந்தேனமர், பூம்பொழிறிகழ் பொற்பதி
பூந்தராய்போற்றுதுமென். றோம்புதன்மையன்முத்தமிழ்
நான்மறைஞானசம்பந்தனொண்டமிழ்மாலைகொண், டாம்ப
டியிவை யேத்தவல்லார்க் கடையாவினையே. ௧௨

திருச்சிற்றம்பலம்.

---

# சீர்காழி.

## பண்-சீகாமரம். உ-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

பண்ணினேர்மொழி மங்கைமார்பலர் பாடியாடிய வோசைநாடொறுங், கண்ணினேரயலே பொலியுங்கடற் காழிப், பெண்ணினொருபங்குடைப்பெருமானை யெம் பெருமானென்றென்றுன்னு, மண்ணலாரடியாரருளாலுங் குறைவிலரே. க

மொண்டலம்பிய வார்திரைக்கடன்மோதிமீதெறி சங்க வங்கமுங், கண்டலம்புடைசூழ் வயல் சேர்கலிக்காழி,வண் டலம்பிய கொன்றையானடி வாழ்த்தியேத்திய மாந்தர்தம் வினை, விண்டலங்கெளிதாமது நல்விதியாமே.

பெயரெனும்மிவைபன்னிரண்டினு முண்டெனப்பெயர் பெற்றவூர்திகழ், கயலுமாம்வயல்சூழ்ந்தழகார்கலிக்காழி, நயனடன்கழலேத்தி வாழ்த்தியஞானசம்பந்தன் செந்தமி ழுரை, யுயருமாமொழிவாருலகத்துயர்ந்தாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## சீகாழி - திருவிராகம் - பண் - நட்டராகம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நம்பொருணமக்கஎென்றுநச்சியிச்சை செய்துநீ
ரம்பரமடைந்துசாலவல்லலுய்ப்பதன் முனம்
மும்பர்நாதனுத்தமனொளி மிகுத்தசெஞ்சடை
நம்பன்மேவுநன்னகர் நலங்கொள்காழி சேர்மினே. க

பாவமேவுமுள்ளமோடு பத்தியின்றி நித்தலும்
மேவமானசெய்துசாவ தன்முனம்மிசைந்துநீர்
தீபமாலை தூபமுஞ்செறிந்தகையராகிநந்
தேவதேவன் மன்னுமூர்திருந்துகாழி சேர்மினே உ

காலினோடுகைகளுந்தளர்ந்துகாமநோய்தனு
வேலைவார்குழலினாரிகழ்ந்துரைப்பதன்முன
மாலினோடுநான்முகன் மதித்தவர்கள்காண்கிலா
நீலமேவுகண்டனார்நிகழ்ந்தகாழிசேர்மினே- ௩

தக்கனார்தலையறிந்தசங்கரன்றன் தரை
யக்கினோடரவசைத்தவந்திவண்ணர்காழியை,
யொக்கஞானசம்மந்தனுரைத்தபாடல்வல்லவர்
மிக்கவின்பமெய்திவீற்றிருந்துவாழ்தன்மெய்மையே.

திருச்சிற்றம்பலம்.

---

# திருக்கழுமலம்

**திருத்தாளச்சதி - பண்-வியாழக்குறிஞ்சி. ௧-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால்வந்தெப்பால்பயின்றுநின்றவும்பரப்-பாலே சேர்வாயேனோர்கான்பயில்கணமுனிவர்களுஞ், சிந்தித்தே வந்திப்பச்சிலம்பின்மங்கைதன்னொடுஞ் - சேர்வார்நாணீள்கயிலைத்திகழ்தருபரிசதெலாஞ், சந்தித்தேயிந்தப்பார்சனங்கணின்றுதங்கணாற் -றமேபேசாணவாழ்வாரக்ககவுசெய்தவனிடங், கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக் - காடார்பூவார்சீர்மேவுங்கழுமலவளநகரே. ௬

கஞ்சத்தேனுண்டிட்டேகளித்துவண்டுசெண்பகக் -கானேதேனே போராருங் கழுமலநகரிறையைத், தஞ்சைச் சார்சண்பைக்கோன்சமைத்தநற்கலைத்துறை - தாமேபோல் வார்தேனேரார்தமிழ்விரகனமொழிக, ளெஞ்சத்தேயின்றிக்கேயிமைத்திசைத்தமைத்தகொண் - டேழேயேழுநாலே மூன்றியலிசையிசையியல்பா, வஞ்சத்தேயின்றிக்கேமனங் கொளப்பயிற்றுவோர்-மார்பே சேர்வாள்வானோர்சீர்மதிநுதன்மடவரலே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

**பண்-மேகராகக்குறிஞ்சி. ௧-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

சேவுயருந்திண்கொடியான்றிருவடியேசரணென்றுசிறந்தவன்பா, லாவியனுமங்கையொடுநான்முகன்றான்வழிபட்டநலங்கொள்கோயில், வாவிதொறும்வண்கமலமுகங்காட்டச் செங்குமுதம்வாய்கள்காட்டக், காவியிருங்கருங்குவளைகருநெய்தல்கண்காட்டுங்கழுமலமே. ௧

புவிமுதலைம்பூதமாய்ப்புலனைந்தாய்நிலனைந்தாய்க்கரணநான்கா, யவையவைசேர்பயனுருவாயல்லவுருவாய்நின்றானமருங்கோயி, றவமுயல்வோர்மலர்பறிப்பத்தாழவிடுகொம்புதைப்பக் கொக்கின்காய்கள், கவணெறிகற்போற்சுனையிற்கரைசேரப்புள்ளிரியுங்கழுமலமே. ௭

திருச்சிற்றம்பலம்.

---

# தேவாரம்.

## பண்-கொல்லி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பண்ணினல்லவண்ணம்வாழலாம்வைகலு
மெண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவில்லைக்
கண்ணினல்லஃதுறுங்கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும்பெருந்தகையிருந்ததே. [illegible]

போதையார்பொற்கிண்ணத்தடிசில்பொல்லாதெனத்
தாதையார்முனிவுறத்தானெனையாண்டவன்
காதையார்குழையினன்கழுமலவளநகர்ப்
பேதையாளவளொடும்பெருந்தகையிருந்ததே.

கருந்தடந்தேன்மல்குகழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோடிருந்தவெம்பிரான்றனை
யருந்தமிழ்ஞானசம்பந்தனசெந்தமிழ்
விரும்புவாரவர்கள்போய்விண்ணுலகாள்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருவெழுகூற்றிருக்கை.

திருச்சிற்றம்பலம்.

ஒருருவாயினைமானாங்காரத்
தீரியல்பாயொருவிண்முதல்பூதல
மொன்றியவிருசுடரும்பர்கள்பிறவும்
படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை
யிருவரோடொருவனாகிநின்றனை
யோராணீழலொண்கழலிரண்டு
முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறி
காட்டினைநாட்டமூன்றாகக்கோட்டினை
யிருநதியரவமோடொருமதிசூடினை
யொருதாளீரயின்மூவிலைச்சூல
நாற்கான்மான்மறியைந்தலையரவ
மேந்தினைகாய்ந்தநால்வாய்மும்மதத்
திருகோட்டொருகரியீடழித்துரித்தனை
யொருதனுவிருகால்வளையவாங்கி

முப்புரத்தோடுநானிலமஞ்சக்
கொன்றுதலத்துறவவுணரையறுத்தனை
யைம்புலனானாலாமந்தக்கரண
முக்குணமிருவளியொருங்கியவானோ
ரேத்தநின்றனையொருங்கியமனத்தோ
டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து
நான்மறையோதியைவகைவேள்வி
யமைத்தாறங்கமுதலெழுத்தோதி
வரன்முறைபயின்றெழுவான்றனைவளர்க்கும்
பிரமபுரம்பேணினை
யறுபதமுரலும்வேணுபுரம்விரும்பினை
யிகலியமைந்துணர்புகலியமர்ந்தனை
பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினை
பாணிமூவுலகும்புதையமேன்மிதந்த
தோணிபுரத்துறைந்தனைதொலையாவிருநிதி
வாய்ந்தபூந்தராயேய்ந்தனை
வரபுரமென்றுணர்சிரபுரத்துறைந்தனை
யொருமலையெடுத்தவிருதிறலரக்கன்
விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை
முந்நீர்த்துயின்றோனான்முகனறியாப்
பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை
யையுறுமமணருமறுவகைத்தேரரு
மூழியுமுணராக்காழியமர்ந்தனை
யெச்சனேழிசையோன்கொச்சையைமெச்சினை
யாறுபதுமைந்துமமர்கல்வியு
மறைமுதனான்கு
மூன்றுகாலமுந்தோன்றநின்றனை
யிருமையினொருமையுமொருமையின்பெருமையு
மறுவிலாமறையோர்
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனறியு
மனையதன்மையையாதலினின்னை
நினையவல்லவரில்லைநீணிலத்தே.

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

## திருத்தோணிபுரம்.

### திருக்குறுந்தொகை. ௫-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மாதியன்றுமனைக்கிருவென்றக்கா
னீதிதான்சொலநீயெனக்காரெனுஞ்
சோதியார்சுடர்த்தோணிபுரவர்க்குத்
தாதியாவனென்றுமென்னறையலே. ௧

நக்கரையந்துபலியிடென்றார்க்கிட்ட
மிக்கவாசையால்வெள்வளைகொள்வது
தொக்கநீர்வயற்றோணிபுரவர்க்குத்
தக்கதன்றுதமதுபெருமைக்கே.

உறவுபேய்க்கணமுண்பதுவெண்டலை
யுறைவதீமமுடலிலோர்பெண்கொடி
துறைகளார்கடற்றோணிபுரத்துறை
யிறைவனார்க்கிவளென்கண்டன்பாவதே. ௮

இட்டமாயினசெய்வாளென்பெண்கொடி
கட்டம்பேசியகாரரக்கன்றனைத்
துட்டடக்கியதோணிபுரத்துறை
யட்டமூர்த்திக்குவன்பதுவாகியே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழுமலம்.

### திருவிருத்தம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லா
நாலஞ்சுபுள்ளினமேந்தினவென்பர்நளிர்மதியம்
கால்கொண்டவண்கைச்சடைவிரித்தாடுங்கழுமலவர்க்
காளன்றிமற்றுமுண்டோவந்தணூழியகலிடமே. ௧

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

படையார்மழுவொன்றுபற்றியகையன்பதிவினவிற்
கடையார்கொடிநெடுமாடங்களோங்குகழுமலமா
மடைவாய்க்குருகினம்பாளைவிரிதொறும்வண்டினங்கள்
பெடைவாய்மதுவுண்டுபோராதிருக்கும்பெரும்பதியே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி நாயனார்.

### பண்-தக்கேசி. எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்தன்னருள் தந்தவெந் தலைவனைமலையின், மாதினை மதித்தங்கொர் பால் கொண்டமணியைவருபுனல் சடையிடைவைத்தவெம்மானை, யேதிலென்மனத்துக்கொரிரும்புண்ட நீரையெண்வகையொ ருவனை யெங்கள்பிரானைக், காதில்வெண் குழையனைக் கடல் கொளமிதந்தகழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே. ௧

குண்டலங்குழைதிகழ்காதனே யென்றுங்கொடுமழுவா ட்படைக் குழகனேயென்றும், வண்டலம்பும்மலர்க் கொன் றையனென்றும்வாய்வெருவித்தொழுதேன்விதியாலே, பண் டைநம் பலமன முங்களைந்தொன்றாய்ப் பசுபதி பதிவினவிப் பலநாளுங்,கண்டலங்கழிக்கரையோதம்வந்துலவுங்கழுமலவ ளநகர்க்கண்டுகொண்டேனே. ௫

செழுமலர்க்கொன்றையுங்கூவிளமலரும்விரவியசடை முடியடிகளைநினைந்திட், டழுமலர்க்கண்ணிணையடியவர்க்கல் லாலறிவரிதவன்திரு வடியிணையிரண்டுங், கழுமலவளநகர்க் கண்டுகொண்டூரன் சடையன்றன் காதலன்பாடிய பத்துந், தொழுமலரெடுத்தகையடியவர்தம்மைத்துன் பமுமிடும்பையு ஞ்சூழகிலாவே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௫. திருக்கோலக்கா.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-தக்கராகம். ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீ
ழுடையுங்கொண்டவுருவமென்கொலோ. ௧

பெண்டான்பாகமாகப்பிறைச்சென்னி
கொண்டான்கோலக்காவுகோயிலாக்
கண்டான்பாதங்கையாற்கூப்பவே
யுண்டானஞ்சையுலகமுய்யவே.

தழுக்கொள்பாவங்களையவேண்டுவீர்
மழுக்கொள்செல்வன்மறிசேரங்கையான்
குழுக்கொள்பூதப்படையான்கோலக்கா
விழுக்காவண்ணமேத்திவாழ்மினே. ௮

நலங்கொள்காழிஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையா
ருலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-தக்கேசி. ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வாளரவார்த்த பிரானைப் பூதநாதனைப் பாதமே தொழுவார், பற்றுவான்றுணையெனக்கெளிவந்தபாவநாசனை மேவரியானை, முற்றலார்திரிபுரமொருமூன்றும்பொன்றவென்றிமால்வரையரியம்பாக், கொற்றவில்லங்கை யேந்தியகோனைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ௧

ஆத்தமென்றெனையாளுகந்தானை யமரர்நாதனைக்குமர
னைப்பயந்த, வார்த்தயங்கிய முலைமடமானைவைத்துவான்மி
சைக்கங்கையையக்கரந்த, தீர்த்தனைச்சிவனைச்செழுந்தேனைத்
தில்லையம்பலத்துண்ணிறைந்தாடுங், கூத்தனைக்குருமாமணித
ன்னைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ௪

அன்றுவந்தெனையகலிடத்தவர்முன்னாளதாகவென்றாவ
ணங்காட்டி, நின்றுவெண்ணெய்நல்லூர்மிசையொளித்தநித்தி
லத்திரட்டொத்தினைமுத்திக், கொன்றினொன்றனையும்பர்பிரா
னையுயரும்வல்லரணங்கெடச்சீறுங், குன்றவில்லியைமெல்
லியலுடனேகோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ௫

நாளுமின்னிசையாற்றமிழ்பரப்புஞானசம்பந்தனுக்கு
லகவர்முன், றாளமீந்தவன்பாடலுக்கிரங்குந்தன்மையாள
னையென்மனக்கருத்தை, யாளும்பூதங்கள்பாடநின்றாடுமங்
கணன்றனையெண்கணமிறைஞ்சுங், கோளிலிப்பெருங்கோயி
லுளானைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ௮

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௫. திருப்புள்ளிருக்குவேளூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதிய
முள்ளார்ந்தசடைமுடியெம் பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே. ௧

கீதத்தைமிகப்பாடுமடியார்கள்குடியாகப்
பாதத்தைத்தொழநின்றபரஞ்சோதிபயிலுமிடம்
வேதத்தின்மந்திரத்தால்வெண்மணலேசிவமாகப்
போதத்தால்வழிபட்டான்புள்ளிருக்குவேளூரே. ௨

திறங்கொண்டவடியார்மேற்றீவினைநோய்வாராமே
யறங்கொண்டுசிவதன்மமுரைத்தபிரானமருமிடம்
மறங்கொண்டங்கிராவணன்றன்வலிகருதிவந்தானைப்
புறங்கண்டசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. ௩

பண்ணொன்றவிசைபாடுமடியார்கள்குடியாக
மண்ணின்றிவிண்கொடுக்குமணிகண்டன்மருவுமிட
மெண்ணின்றிமுக்கோடிவாணாளதுடையானைப்
புண்ணொன்றப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. ௮

செடியாயவுடறீர்ப்பான்றீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்குவேளூரைக்
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியன்சம்பந்தன்சொன்
மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாமறுபிறப்பே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம் ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஆண்டானையடியேனையாளாக்கொண்டுவடியோடுமுடி யயன்மாலறியாவண்ணம், நீண்டானைநெடுங்களமாநகரான்றன்னைநேமிவான்படையானைநீறுசேரவாணுகந், கீண்டானைக்கேதாரமேவினானைக்கேடிலியைக் கிளர்பொறிவாளரவோடென்பு, பூண்டானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. ௧

பத்திமையாற்பணிந்தடியேன்றன்னைப்பன்னாட்பாமாலைபாடப்பயில்வித்தானை, யெத்தேவுமேத்துமிறைவன்றன்னையெம்மானையென்னுள்ளத்துள்ளேயூறு, மத்தேனையமுதத்தையாவின்பாலையண்ணிக்குந்தீங்கரும்பையரனையாதிப், புத்தேளைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. ௩

பேராயிரம்பரவிவானோரேத்தும்பெம்மானைப்பிரிவிலாவடியார்க்கென்றும், வாராதசெல்வம்வருவிப்பானைமந்திரமுந்தந்திரமுமருந்துமாகித், தீராநோய்தீர்த்தருளவல்லான்றன்னைத்திரிபுரங்கடீயெழத்திண்சிலைகைக்கொண்ட, போரானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. ௮

திருச்சிற்றம்பலம்.

# ௧௭. திருக்கண்ணார்கோயில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-குறிஞ்சி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தண்ணார்திங்கட்பொங்கரவந்தாழ்புனல்சூடிப்
பெண்ணாணாயபேரருளாளன்பிரியாத
கண்ணார்கோயில்கைதொழுவோர்கட்கிடர்பாவம்
நண்ணாவாகுநல்வினையாயநண்ணும்மே. ௧

மறுமாணுருவாய்மற்றிணையின்றிவானோரைச்
செறுமாவலிபாற்சென்றுலகெல்லாமளவிட்ட
குறுமாணுருவன்றற்குறியாகக்கொண்டாடுங்
கறுமாகண்டன்மேயதுகண்ணார்கோயிலே. ௬

முன்னொருகாலத்திந்திரனுற்றமுனிசாபம்
பின்னொருநாளவ்விண்ணவரேத்தப்பெயர்வெய்தித்
தன்னருளாற்கண்ணாயிரமீந்தோன்சார்வென்பர்
கன்னியர்நாளுந்துன்னமர்கண்ணார்கோயிலே. ௭

காமருகண்ணார்கோயிலுளானைக்கடல்சூழ்ந்த
பூமருசோலைப்பொன்னியன்மாடப்புகலிக்கோ
னாமருதொன்மைத்தன்மையுண்ஞானசம்பந்தன்
பாமருபாடல்பத்தும்வல்லார்மேற்பழிபோமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௮ திருக்கடைமுடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அருத்தனையறவனையமுதனைநீர்
விருத்தனைப்பாலனைவினவுதிரே
லொருத்தனையல்லதிங்குலகமேத்துங்
கருத்தவன்வளநகர்கடைமுடியே. ௧

திரைபொருதிருமுடிதிங்கள்விம்மு
மரைபொருபுலியதளடிகளிடந்
திரையொடுநுரைபொருதெண்சுனைநீர்
கரைபொருவளநகர்கடைமுடியே. ௰

பொன்றிகழ்காவிரிப்பொருபுனல்சீர்
சென்றடைகடைமுடிச்சிவனடியை
நன்றுணர்ஞானசம்பந்தன்சொன்ன
வின்றமிழிவைசொலவின்பமாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௧௫. திருநின்றியூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-நட்டபாடை ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சூலம்படைச்சுண்ணப்பொடிசாந்தஞ்சுடுநீறு
பாலம்மதிபவளச்சடைமுடிமேலதுபண்டைக்
காலன்வலிகாலினொடுபோக்கிக்கடிகமழு
நீலம்மலர்ப்பொய்கைநின்றியூரின்னிலையோர்க்கே. ௧

அச்சம்மிலர்பாவம்மிலர்கேடும்மிலரடியார்
நிச்சம்முறுநோயும்மிலர்தாமுந்நின்றியூரி
னச்சம்மிடறுடையார்நறுங்கொன்றைநயந்தானைப்
பச்சம்முடையடிகடிருப்பாதம்பணிவாரே. ௨

குன்றமதுவெடுத்தானுடறோளுந்நெரிவாக
நின்றங்கொருவிரலாலுறவைத்தானின்றியூரை
நன்றார்தருபுகலித்தமிழ்ஞானம்மிகுபந்தன்
குன்றாத்தமிழ்சொல்லக்குறைவின்றிநிறைபுகழே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

### திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. ௫-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கொடுங்கண்வெண்டலைகொண்டுகுறைவிலைப்
படுங்கணொன்றிலராய்ப்பலிதேர்ந்துண்பர்
நெடுங்கண்மங்கையராட்டயர்நின்றியூர்க்
கடுங்கைக்கூற்றுதைத்திட்டகருத்தரே. ௧

வீதிவேனெடுங்கண்ணியர்வெள்வளை
நீதியேகொளப்பாலதுநின்றியூர்
வேதமோதிவிளங்குவெண்கோடராய்க்
காதில்வெண்குழைவைத்தவெங்கள்வரே. ௯

எளியனாமொழியாவிலங்கைக்கிறை
களியினாற்கயிலாயமெடுத்தவ
னொளியவூன்றவல்லானமர்நின்றியூ
ரளியினாற்றொழுவார்வினையல்குமே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-நட்டராகம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அற்றவனடியார்தமக்காயிழைபங்கினராம்
பற்றவனெம்பராபரனென்றும்பலர்விரும்பும்
கொற்றவனூர்குறுகாதவனூர்நெடுவெஞ்சரத்தாற்
செற்றவனூர்க்கிடமாவதுநந்திருநின்றியூரே. ௧

வாசத்திணர்மலர்க்கொன்றையுள்ளார்வடிவார்ந்தநீறு
பூசத்தினர்புகலிந்நகர்போற்றுமெம்புண்ணியத்தார்
நேசத்தினனென்னையாளுங்கொண்டார்நெடுமாகடல்சூழ்
தேசத்தினர்க்கிடமாவதுநந்திருநின்றியூரே. ௨

வஞ்சங்கொண்டார்மனஞ்சேரகிலார்நறுநெய்தயிர்பா
லஞ்சுங்கொண்டாடியவேட்கையினாரதிகைப்பதியே
தஞ்சங்கொண்டார்தமக்கென்றுமிருக்கைசரணடைந்தார்
நெஞ்சங்கொண்டார்க்கிடமாவதுநந்திருநின்றியூரே. ௫

சேரும்புகழ்த்தொண்டர்செய்கையறாத்திருநின்றியூரிற்
சீருஞ்சிவகதியாயிருந்தானைத்திருநாவலா
ரூரனுரைத்தவுறுதமிழ்பத்தும்வல்லார்வினைபோய்
பாரும்விசும்புந்தொழப்பரமன்னடிகூடுவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

பண்-தக்கேசி. ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

திருவும்வண்மையுந் திண்டிறலரசுஞ்சிலந்தியார் செய்த
செய்பணிகண்டு, மருவுகோச்செங்கணான்றனக்களித்தவார்
த்தை கேட்டுநுன் மலரடியடைந்தேன், பெருகுபொன்னி
வந்துந்துபன்மணியைப் பிள்ளைப்பல்கணைப்பண்ணையுணண்
ணித், தெருவுந்தெற்றியுமுற்றமுப்பற்றிக்கிரட்டுந்தென்றிரு
நின்றியூரானே. ௧

அணிகொளாடையப்பூணணிமாலையமுதுசெய்தமுதம்
பெறுதண்டி, யிணைகொளேழெழுநூறிருப்பனுவலீன்றவன்
றிருவினுக்கரையன், கணைகொள்கண்ணப்பனென்றிவர்
பெற்றகாதலின்னருளாதரித்தடைந்தேன், றிணைகொள்செந்
தமிழ்பைங்கிளிதெரியுஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே.

மொய்த்தசீர்முந்நூற்றறுபதுவேலிமூன்றுநூறுவேதிய
ரொடுநுனக்கு, வொத்தபொன்மணிக்கலசங்களேந்தியோங்
குநின்றியூரென்றுனக்களிப்பப், பத்திசெய்தவப்பரசுராமற்
குப்பாதங்காட்டியநீதிகண்டடைந்தேன், சித்தவானவர்தா
னவர்வணங்குஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே. ௩

திருச்சிற்றம்பலம்.

---

# ௨0. திருப்புன்கூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம். ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முந்திநின்றவினைகளவைபோகச்
சிந்திநெஞ்சேசிவனார்திருப்புன்கூ
ரந்தமில்லாவடிகளவர்போலுங்
கந்தமல்குகமழ்புன்சடையாரே. ௧

மூவராயமுதல்வர்முறையாலே
தேவரெல்லாம்வணங்குந்திருப்புன்கூ
ராவரென்னுமடிகளவர்போலு
மேவினல்லாரெயின்மூன்றெரித்தாரே. ௨

மாடமல்கு மதில்சூழ்காழிமன்
சேடர்செல்வ ருறையுந்திருப்புன்கூர்
நாடவல்லஞானசம்பந்தன
பாடல்பத்தும் பரவிவாழ்மினே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

## திருப்புன்கூருந் திருநீடூரும்.

### திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பிறவாதே தோன்றிய பெம்மான்றன்னைப் பேணாதா ரவர்தம்மைப் பேணாதானைத், துறவாதே கட்டறுத்தசோதி யானைத்தூநெறிக்குந்தூநெறியாய்நின்றான்றன்னைத், திறமாய வெத்திசைக்குந்தானே யாகித்திருப்புன்கூர்மேவியசிவலோ கனை, நிறமாமொளியானை நீடூரானைநீதனேனென்னேநானி னையாவாறே. க

கலைஞானங்கல்லாமேகற்பித்தானைக்கடுநரகஞ்சாரா மேகாப்பான்றன்னைப், பலவாயவேடங்கடானேயாகிப்பணி வார்கட்கங்கங்கே பற்றானானைச், சிலையாற்புரமெரித்த தீயா டியைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை, நிலையார் மணிமாட நீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண்-தக்கேசி. ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுகா ரணமாக, வந்தகாலன்றனாருயிரதனைவவ்வினாய்க்குன்றன்வண் மைகண்டடியே, னெந்தைநீயெனைநமன்றமர்நலியிலிவன்மற் றென்னடியானெனவிலக்குஞ், சிந்தையால்வந்துன்றிருவடி யடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. க

வையகமுற்றுமாமழைமறந்துவயலினீரிலைமாநிலந்தருகோ, முய்யக்கொள்கமற் றெங்களையென்னவொளிகொள்வெண்முகிலாய்ப்பரந்தெங்கும், பெய்யுமாமழைப்பெருவெள்ளந்தவிர்த்துப்பெயர்த்தும்பன்னிருவேலிகொண்டருளுஞ், செய்கைகண்டுநின்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. ௨

நற்றமிழ்வல்லஞானசம்பந்தனாவினுக்கரையனாளைப்போவானுங், கற்றசூதனற்சாக்கியன்சிலந்திகண்ணப்பன்கணம்புல்லனென்றிவர்கள், குற்றஞ்செய்யினுங்குணமெனக்கருதுங்கொள்கைகண்டுநின்குரைகழலடைந்தேன், பொற்றிரண்மணிக்கமலங்கண்மலரும்பொய்கைசூழ்திருப்புன்கூருளானே.

மூவெயில்செற்றஞான்றுய்ந்தமூவரிலிருவர்நின்றிருக்கோயிலின்வாய்தல், காவலாளரென்றேவியபின்னையொருவனீகரிகாடரங்காக,மானைநோக்கியோர்மாநடமகிழமணிமுழாமுழக்கவருள்செய்த, தேவதேவநின்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. ௮

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௧. திருநீடூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-தக்கேசி. எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஊர்வதோர்விடையொன்றுடையானையொண்ணுதற்றனிக் கண்ணுதலானைக், காரதார்கறைமாமிடற்றானைக் கருதலார்புர மூன்றெரித்தானை, நீரில்வாளைவ ரால்குதிகொள்ளுநிறைபுனற்கழனிச்செல்வநீடூர்,பாருளார்பரவித்தொழநின்றபரமனைப்பணியாவிடலாமே. ௧

துன்னுவார்சடைத்தூமதியானைத்துயக்குறாவகைதோன்றுவிப்பானைப், பன்னுநான்மறைபாடவல்லானைப்பார்த்தனுக்கருள்செய்தபிரானை, யென்னையின்னரு ளெய்துவிப்பானையேதிலார்தமக் கேதிலன்றன்னைப், புன்னைமாதவி போதலர்நீடூர்ப்புனிதனைப்பணியாவிடலாமே. ௨

பேரோராயிரமும்முடையானைப்பேசினாற்பெரிதும்மினி யானை, நீரூர்வார்சடைநின்மலன்றன்னைநீடூர்நின்றுகந்திட்ட பிரானை, யாரூரன்னடிகாண்பதற்கன்பாயாதரித்தழைக்கிட் டவிம்மாலை, பாரூரும்பரவித்தொழவல்லார்பத்தராய்முத்தி தாம்பெறுவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

# ௨௨. திருஅன்னியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-குறிஞ்சி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மன்னியூருறை, சென்னியார்பிறை
யன்னியூரமர், மன்னுசோதியே. ௧

பழகுந்தொண்டர்வம், மழகனன்னியூர்க்
குழகன்சேவடி, தொழுதுவாழ்மினே. ௨

இன்பம்வேண்டுவீ, ரன்பனன்னியூர்
நன்பொனென்னுமி, னும்பராகவே. ௩

பூந்தராய்ப்பந்த, னய்ந்தபாடலால்
வேந்தனன்னியூர், சேர்ந்துவாழ்மினே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பாறலைத்தபடுவெண்டலையின
னீறலைத்தசெம்மேனியனேரிழை
கூறலைத்தமெய்கோளரவாட்டிய
வாறலைத்தசடையன்னியூரரே. ௧

பண்டொத்தமொழியாளையோர்பாகமா
யிண்டைச்செஞ்சடையன்னிருள்சேர்ந்ததோர்
கண்டத்தன்கரியின்னுரிபோர்த்தவ
னண்டத்தப்புறத்தானன்னியூரரே. ௨

வஞ்சரக்கன்கரமுஞ்சிரத்தொடு
மஞ்சமஞ்சமோராறுநாள்கூப்பிடப்
பஞ்சின்மெல்விரலாலடர்த்தாயிழை
யஞ்சலஞ்சலென்றானன்னியூரரே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௩. திருத்துருத்தியுந் திருவேள்விக்குடியும்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-சாதாரி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஓங்கிமேலுழிதருமொலிப்புனற்கங்கையையொருசடைமேற்
றாங்கினாரிடுபலிதலைக்கலனாக்கொண்டதம்மடிகள் [ழ்
பாங்கினாலுமையொடும்பகலிடம்புகலிடம்பைம்பொழில்சூ
வீங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. ௧

தூறுசேர்சுடலையிற்சுடரெரியாடுவர்துளங்கொளிசேர்
நீறுசாந்தெனவுகந்தணிவர்வெண்பிறைமல்குசடைமுடியார்
நாறுசாந்திளமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
வீறுசேர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே

விண்ணுலாம்விரிபொழில்விரைமணற்றுருத்திவேள்விக்குடியு
மொண்ணுலாவொலிகழலாடுவாரரிவையோடுறைபதியை
நண்ணுலாம்புகலியுளருமறைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணுலாமருந்தமிழ்பாடுவாராடுவார்பழியிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

மூப்பதுமில்லை-பண்-நட்டராகம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மூப்பதுமில்லைப்பிறப்பதுமில்லையிறப்பதில்லைச்
சேர்ப்பதுகாட்டகத்தூரினுமாகச்சிந்திக்கினல்லாற்
காப்பதுவேள்விக்குடி-தண்டுருத்தியெங்கோனரைமே
லார்ப்பதுநாகமறிந்தோமேலிவர்க்காட்படோமே. ௧

துறவனார் தம்மகடம்மகனார் மணவாட்டிகொல்லே
றவனாராயங்கோர்பன்றிப்பின்போவதும்மாயங்கண்டீ
றைவனாதியார்சோதியாராயங்கோர்சோர்வுபடா
உறவனாவதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. ௯

கூடலர்மன்னன்குலநாவலூர்க்கோனல்த்தமிழைப்
பாடவல்லபரமன்னடியார்க்கடிமைவழுவா
நாடவல்லதொண்டனாரூரனாட்படுமாறுசொல்லிப்
பாடவல்லார்பரலோகத்திருப்பதுபண்டமன்றே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# உச. எதிர்கொள்பாடி.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-இந்தளம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்காள்
செத்தபோதிலாருமில்லைச்சிந்தையுள்வைம்மின்கள்
வைத்தவுள்ளமாற்றவேண்டாவம்மின்மனத்தீரே
அத்தர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. ௧

தோற்றமுண்டேன்மரணமுண்டுதுயரமனைவாழ்க்கை
மாற்றமுண்டேல்வஞ்சமுண்டுநெஞ்சமனத்தீரே
நீற்றரேற்றர்நீலகண்டர்நிறைபுனனீள்சடைமே
லேற்றர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. ௨

தந்தையாருந்தவ்வையாருமெட்டனைச்சார்வாகார்
வந்துநம்மோடுள்ளளாவிவானநெறிகாட்டுஞ்
சிந்தையீரேநெஞ்சினீரேதிகழ்மதியஞ்சூடு
மெந்தைகோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. ௩

முத்துநீற்றுப்பவளமேனிச்செஞ்சடையானுறையும்
பத்தர்பந்தத்தெதிர்கொள்பாடிப்பரமனையேபணியச்
சித்தம்வைத்ததொண்டர்தொண்டன்சடையன்வன்சிறுவன்
பத்தனூரன்பாடல்வல்லார்பாதம்பணிவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# உரு. திருமணஞ்சேரி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-இந்தளம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அயிலாருமம்பதனாற்புரமூன்றெய்து
குயிலாருமென்மொழியாளொருகூறாகி
மயிலாருமல்கியசோலைமணஞ்சேரி
பயில்வானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. க

விதியானைவிண்ணவர்தாந்தொழுதேத்திய
நெதியானைநீள்சடைமேனிகழ்வித்தவான்
மதியானைவண்பொழில்சூழ்ந்தமணஞ்சேரிப்
பதியானைப்பாடவல்லார்வினைபாறுமே. உ

கண்ணாருங்காழியர்கோன்கருத்தார்வித்த
தண்ணார்சீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
மண்ணாருமாவயல்சூழ்ந்தமணஞ்சேரி
பண்ணாரப்பாடவல்லார்க்கில்லைபாவமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பட்டநெற்றியர்பாய்புலித்தோலினர்
நட்டநின்றுநவில்பவர்நாடொறுஞ்
சிட்டர்வாழ்திருவார்மணஞ்சேரியெம்
வட்டவார்சடையார்வண்ணம்வாழ்த்துமே. க

துன்னுவார்குழலாளுமையாளொடும்
பின்னுவார்சடைமேற்பிறைவைத்தவர்
மன்னுவார்மணஞ்சேரிமருந்தினை
யுன்னுவார்வினையாயினவோயுமே. உ

கடுத்தமேனியரக்கன்கயிலையை
யெடுத்தவனெடுநீண்முடிபத்திறப்
படுத்தலும்மணஞ்சேரியருளெனக்
கொடுத்தனன்கொற்றவாளொடுநாமமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# உ௬. திருக்குறுக்கைவீரட்டம்.

## திருநாவுக்கரசு நாயனார்.

திருநேரிசை. ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி
யழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்
குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே. ௧

சிலந்தியுமானைக்காவிற்றிருநிழற்பந்தர்செய்து
வுலந்தவணிறந்தபோதேகோச்செங்கணானுமாகக்
கலந்தநீர்க்காவிரிசூழ்சோணாடுச்சோழர்தங்கள்
குலந்தனிற்பிறப்பித்திட்டார்குறுக்கைவீரட்டனாரே. ௪

ஏறுடனேழடர்த்தானெண்ணியாயிரம்பூக்கொண்டு
வாறுடைச்சடையினானையர்ச்சித்தானடியிணைக்கீழ்
வேறுமோர்பூக்குறையமெய்ம்மலர்க்கண்ணையீண்டக்
கூறுமோராழியீந்தார்குறுக்கைவீரட்டனாரே. ௫

காப்பதோர்வில்லுமம்புங்கையுடையிறைச்சிப்பாரந்
தோற்பெருஞ்செருப்புத்தொட்டுத்தூயவாய்க்கலசமாட்டித்
தீப்பெருங்கண்கள்செய்யகுருதிநீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக்கொண்டார்குறுக்கைவீரட்டனாரே. ௭

நிறைமறைக்காடுதன்னினீண்டெரிதீபந்தன்னைக்
கறைநிறத்தெலிதன்மூக்குச்சுட்டிடக்கனன்றுதூண்ட
நிறைகடல்மண்ணும்விண்ணும்நீண்டவானுலகமெல்லாங்
குறைவறக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. ௮

அணங்குமைபாகமாகவடக்கியவாதிமூர்த்தி
வணங்குவாரிடர்கடீர்க்குமருந்துநல்லருந்தவத்த
கணம்புல்லர்க்கருள்கள்செய்துகாதலாமடியார்க்கென்றுங்
குணங்களைக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. க0

திருச்சிற்றம்பலம்.

## உஎ. திருக்கருப்பறியலூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

திருவிராகம். பண் - இந்தளம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சுற்றமொடுபற்றவைதுயக்கறவறுத்துக்
குற்றமில்குணங்களொடுகூடுமடியார்கண்
மற்றவரைவானவர்தம்வானுலகமேற்றக்
கற்றவனிருப்பதுகருப்பறியலூரே. க

விண்ணவர்கள்வெற்பரசுபெற்றமகண்மெய்த்தேன்
பண்ணமருமென்மொழியினாளையணைவிப்பா
னெண்ணிவருகாமனுடல்வேவவெறிகாலுங்
கண்ணவனிருப்பதுகருப்பறியலூரே.

நலந்தருபுனற்புகலிஞானசம்பந்தன்
கலந்தவர்கருப்பறியன்மேயகடவுள்ளைப்
பலந்தருதமிழ்க்கிளவிபத்துமிவைகற்று
வலந்தருமவர்க்குவினைவாடலெளிதாமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-நட்டராகம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சிம்மாந்துசிம்புளித்துச்சிந்தையினில்வைத்துகந்துதிறம்பாவண்ணங், கைம்மாவினுரிவையுரிபோர்த்துமைவெருவக்கண்டானைக்கருப்பறியலூர்க்,கொய்ம்மாவின்மலர்ச்சோலைக்குயில்பாடமயிலாடுங்கொகுடிக்கோயி, லெம்மானைமனத்தினாலினைந்தபோதவர்நமக்கினியவாறே. க

நீற்றுருவமேனியராய்நினைவார்தம் முள்ளத்தேநிறைந்து தோன்றுங், காற்றானைத்தீயானைக்கதிரானை மதியானைக்கருப்பறியலூர்க், கூற்றானைக்கூற்றுதைத்துக்கோலவளையாளவளோடுங்கொகுடிக்கோயி, லேற்றானை மனத்தினினைந்தபோதவர்நமக்கினியவாறே. ௨

கலைமலிந்ததென்புலவர் கற்றோர்தம் மிடர்தீர்க்குங்கருப்பறியலூர்க், குலைமலிந்த கோட்டெங்கு மட்டொழுகும் பூஞ்சோலைக்கொகுடிக்கோயி, லிலைமலிந்த மழுவானைமனத்தினலன்புசெய் தின்பமெய்தி, மலைமலிந்ததோளூரன் வனப்பகையப்பன்னுரைத்தவண்டமிழ்களே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௮. திருக்குரக்குக்கா.

## திருநாவுக்கரசு நாயனார்.

### திருக்குறுந்தொகை. ருந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மரக்கொக்காமெனவாய்விட்டலறிநீர்
சரக்குக்காவித்திரிந்தயராதுகால்
பரக்குங்காவிரிநீரலைக்குங்கரைக்
குரக்குக்காவடையக்கெடுங்குற்றமே. ௧

கட்டாறேகழிகாவிரிபாய்வயல்
கொட்டாறேபுனலூறுகுரக்குக்கா
முட்டாதுவடியேத்தமுயல்பவர்க்
கிட்டாதுவிடரோடமெவடுக்குமே. ௨

இரக்கமின்றிமலையெடுத்தான்முடி
யுரத்தையொல்கவடர்த்தானுறைவிடங்
குரக்கினங்குதிகொள்ளுங்குரக்குக்கா
வரத்தனைப்பெறவாருலகாள்வரே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# உகூ. திருவாழ்கொளிபுத்தூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண்-தக்கராகம். க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொடியுடைமார்பினர்போர்விடையேறிப் பூதகணம் புடைசூழக், கொடியுடையூர்திரிந்தையங்கொண்டுபலபலகூறி, வடிவுடைவாணெடுங்கண்ணுமைபாகமாயவன்வாழ்கொளிபுத்தூர், கடிகமழ்மாமலரிட்டுக்கறைமிடற்றானடிகாண்போம். க

அரைகெழுகோவணவாடையின்மேலோராடரவம்மசைத்தையம், புரைகெழுவெண்டலையேந்திப்போர்விடையேறிப்புகழ, வரைகெழுமங்கையதாகமோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர், விரைகமழ்மாமலர்தூவிவிரிசடையானடிசேர்வோம். உ

கல்லுயர்மாக்கடனின்றுமுழுங்குங்கரைபொருகாழியமூதூர், நல்லுயர்நான்மறைநாவினற்றமிழ்ஞானசம்பந்தன், வல்லுயர்சூலமும்வெண் மழுவாளும்வல்லவன்வாழ்கொளிபுத்தூர், சொல்லியபாடல்கள்வல்லார் துயர்கெடுதலெளிதாமே. கக

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-தக்கேசி. எ-ந். திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தலைக்கலன்றலைமேற்றரித்தானைத்தன்னையென்னைநினைக்கத்தருவானைக், கொலைக்கையானையுரிபோர்த்துகந்தானைக் கூற்றுதைத்தகுரைசேர்கழலானை, யலைத்தசெங்கண்விடையேறவல்லானை யானையாவடியேனடிநாயேன், மலைத்தசெந்நெல்வயல்வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந்தென்னினைக்கேனே. க

தேனைபாடியகொன்றையினானைத்தேவர்கைதொழுந்தேவர்பிரானை, யூனமாயினதீர்க்கவல்லானையொற்றையேற்றனைநெற்றிக்கண்ணனைக், கானவானையின்கொம்பினைப்பீழ்ந்தகள்ளப்பிள்ளைக்குங்காண்பரிதாய, வானகாடனைவாழ்கொளிபுத்தூர்மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனே. அ

திருச்சிற்றம்பலம்.

## ௩௰. திருப்பழமண்ணிப்படிக்கரை.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-நட்டராகம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முன்னவனெங்கள்பிரான் முதல்காண்பரிதாயபிரான்
சென்னியிலெங்கள்பிரான் திருநீலமிடற்றெம்பிரான்
மன்னியவெங்கள்பிரான் மறைநான்குங்கல்லாணிழற்கீழ்ப்
பன்னியவெங்கள்பிரான் பழமண்ணிப்படிக்கரையே. ௧

ஆண்டங்கமாலைசென்னியடிமேலலரிட்டுநல்ல
தொண்டங்கடிபாவித்தொழுதேத்திநின்றாடுமிடம்
வெண்டிங்கள்வெண்மழுவன் விரையார்கதிர்மூவிலைய
பண்டங்கன்மேயவிடம் பழமண்ணிப்படிக்கரையே. ௨

பல்லுயிர்வாழுந்தெண்ணீர்ப் பழமண்ணிப்படிக்கரையை
யல்லியந்தாமரைத்தாரரூரன்றுரைத்ததமிழ்
சொல்லுதல்கேட்டல்வல்லாரவர்க்குந்தமர்க்குங்கிளைக்கு
மெல்லியநண்பகலுமிடர் கூருதலில்லையன்றே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## ௩௧. திருஓமாம்புலியூர்

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

பண்-புறநீர்மை. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பூங்கொடிமடவாளுமையொருபாகம்புரிதருசடைமுடி யடிகள், வீங்கிருணட்டமாடுமெம்மிறைவர்விருப்பொடுமுறை விடம்வினவிற், றேங்கமழ்பொழிலிற்செழுமலர்கோதிச்செறி தருவண்டிசைபாடு, மோங்கியபுகழாரோமமாம்புலியூருடை யவர்வடதளியதுவே. ௧

சம்பரற்கருளிச் சலந்தரன்வீயத் தழலுமிழ் சக்கரம்ப டைத்த, வெம்பெருமானாரிமையவரேத்தவினிதினங்குறைவி டம்வினவில், லம்பரமாகியழலுமிழ்புகையினாகுதியான்மழை பொழியு, மும்பர்களேத்துமோமமாம்புலியூருடையவர்வட தளியதுவே. ௨

பாங்குடைத்தவத்துப்பகீரதற்கருளிப்படர்சடைக்கரந்தநீர்க்கங்கை, தாங்குதறவிர்த்தராதலத்திழித்ததத்துவனுறைவிடந்திசைவா, யோங்கெரிமூன்றுமமர்ந்துடனிருந்தவங்கையாலாகுதிவேட்டு, மோங்கியமறையோரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. ௰

விளைதருவயலுள்வெயில்செறிபவளமேதிகண்மேய்புலத்திடறி, யொளிதரமல்குமோமமாம்புலியூருடையவர்வடதளியரனைக், களிதருநிவப்பிற்காண்டகுசெல்வக்காழியுண்ஞானசம்பந்த, னளிதருபாடல்பத்தும்வல்லார்களமரலோகத்திருப்பாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு நாயனார்.

### திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஆராருமூவிலைவேலங்கையானையலைகடனஞ்சயின்றானையமரரேத்து, மோராருமதிபொதியுஞ்சடையினானையெழுபிறப்புமெனையாளாவுடையான்றன்னை, யூராரும்படைநாகமாட்டுவானையுயர்புகழ்சேர்தருமோமமாம்புலியூர்மன்னுஞ், சீராரும்வடதளியெஞ்செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள்செலுத்தினேனே. ௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௰௨ திருக்கானாட்டுமுள்ளூர்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

### பண்-கொல்லிக்கௌவாணம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வள்வாயமதிமிளிரும்வளர்சடையினானைமறையவனைவாய்மொழியைவானவர்தங்கோனைப், புள்வாயைக்கீண்டுலகம்விழுங்கியுமிழ்ந்தானைப்பொன்னிறத்தின் முப்புரிநூலானைமுகத்தினானை, முள்வாயமடற்றாழைமுகிழ்முடைத்தாழையின்றுமொட்டலர்ந்துவிரைநாறுமுருகுவிரிபொழில்சூழ்,கள்வாயகருங்குவளைகண்வளருங்கழனிக் கானாட்டுமுள்ளூரிற் கண்டுதொழு ௧

மருவார்பதின்மூன்றொன்றவெய்துமாமலையான்மடந்தை
யொருபால்பாகமாகச்செய்தவும்பர்பிரானவனூர்
கருவார்சாலியாலைமல்கிக்கழன்மன்னர்காத்தளித்த
திருவான்மலிந்தசேடர்வாழுந்தென்றிருப்பூவணமே. உ

திண்ணார்புரிசைமாடமோங்குதென்றிருப்பூவணத்துப்
பெண்ணார்மேனியெம்மிறையைப்பேரியலின்றமிழா
னண்ணாருட்கக்காழிமல்குஞானசம்பந்தன்சொன்ன
பண்ணார்பாடல்பத்தும்வல்லார்பயில்வதுவானிடையே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம். ச--ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வடிவேறுதிரிசூலந்தோன்றுந்தோன்றும்வளர்சடைமேலிளமதியந்தோன்றுந்தோன்றுங், கடியேறுகமழ்கொன்றைக் கண்ணிதோன்றுங் காதில் வெண்குழைதோடு கலந்துதோன்றும், மிடியேறுகளிற்றுரிவைப்போர்வைதோன்றுமெழிற்றிகழுந்திருமுடியுமிலங்கித்தோன்றும், பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும்பொழிற்றிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. க

படைமலிந்தமழுவாளுமானுந்தோன்றும் பன்னிரண்டுகண்ணுடையபிள்ளைதோன்று, மடைமலிந்தவிடையோடுகொடியுந்தோன்று நான்மறையினொலிதோன்று நயனந்தோன்று, முடைமலிந்தகோவணமுங்கீளுந்தோன்றுமூறல்வெண்சிரமாலையுலாவித்தோன்றும், புடைமலிந்தபூதத்தின்பொலிவுதோன்றும்பொழிற்றிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. ச

மயலாகுந்தன்னடியார்க்கருளுந்தோன்று மாசிலாப்புன்சடைமேன்மதியந்தோன்று, மியல்பாகவிடுபிச்சையேற்றறோன்றுமிருங்கடனஞ் சுண்டிருண்ட கண்டந்தோன்றுங், கயல்பாயக்கடுங்கலுழிக் கங்கைநங்கையாயிரமாமுகத்தினொடுவானிற்றோன்றும், புயல்பாயச்சடைவிரித்தபொற்புத்தோன்றும்பொழிற்றிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே.

பாராழிவட்டத்தார்பரவியிட்டபன்மலரு நறும்புகை யும்பரந்துதோன்றாஞ், சீராழித்தாமரையின்மலர்களன்ன திருந்தியமாநிறத்தசேவடிகடோன்றா,மோராழித்தேருடை யிலங்கைவேந்தனுடறுணித்தவிடர்பாவங்கெடுப்பித்தன்று, போராழிமுன்னீந்தபொற்புத்தோன்றும்பொழிறிகழும்பூவ ணத்தெம்புனிதனார்க்கே. ௬

திருச்சிற்றம்பலம்.

---

### சுந்தரமூர்த்திநாயனார்.

**பண் - இந்தளம். எ-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

திருவுடையார்திருமாலயனாலும்
உருவுடையாருமையாளையோர்பாகம்
பரிவுடையாரடைவார்வினைதீர்க்கும்
புரிவுடையாருறைபூவணமீதோ. ௧

எண்ணியிருந்துகிடந்துநடந்தும்
அண்ணலெனநினைவார்வினைதீர்ப்பார்
பண்ணிசையார்மொழியார்பலர்பாடப்
புண்ணியனாருறைபூவணமீதோ. ௨

சீரின்மிகப்பொலியுந்திருப்பூவணம்
ஆரவிருப்பிடமாவுறைவானை
ஊரனுரைத்தசொன்மாலைகள்பத்திவை
பாரிலுரைப்பவர்பாவமறுப்பரே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## ௧௨. திருச்சுழியல்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

**பண் - நட்டராகம். எ-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

ஊனாயுயிர்புகலாயகலிடமாய்முகில்பொழியும்
வானாய்வருமதியாய்விதிவருவானிடம்பொழிலின்
றேனாதரித்திசைவண்டினமிழற்றுந்திருச்சுழிய
னானாவிதநினைவார்தமைநலியார்நமன்றமரே. ௧

மலர்தாங்கியபாசப்பிறப்பறுப்பீர்துறைக்கங்கைச்
சலந்தாங்கியமுடியானமர்ந்திடமாந்திருச்சுழிய [லன்
னிலந்தாங்கியமலராற்கொழும்புகையானினைந்தேத்
தலந்தாங்கியபுகழான்மிகுதவமாஞ்சதுராமே. ௯

நீரூர்தருநிமலன்றிருமலையார்க்கயலருகே
தேரூர்தருமரக்கன்சிரநெரித்தான்றிருச்சுழியல்
பேரூரெனவுறைவானடிபெயர்நாவலர்கோமா
னாரூரனதமிழ்மாலைபத்தறிவார்துயரிலரே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# ௩௫. திருக்குற்றாலம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி ௧-ந்திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வம்பார்குன்றநீடுயர்சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றால
மம்பானெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள். ௧

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலங்
கடிகொள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்
யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள். ௨

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# திருக்குறும்பலா.

பண் - காந்தாரம் உ-ந்திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்துதேவிபாகம்
பொருந்திப்பொருந்தாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ

ரிருந்தவிடம்வினவிலேலங்கமழ்சோலையின்வண்டியாழ்செய்
குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே.

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பானம்மை
யாட்பலவுந்தானுடையவம்மானிடம்போலுமந்தண்சாரற்
கீட்பலவுங்கீண்டுகிளைகிளையனமந்திபாய்ந்துண்டுவிண்ட
கோட்பலவின்றீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே.

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ண
ணம்பானடிபரவுநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவைபத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
தம்பாலதீவினைகள்போயகலுநல்வினைகளாளாவன்றே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௧௪. திருநெல்வேலி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சாதாரி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மருந்தவைமந்திரமறுமைநன்னெறியவைமற்றுமெல்லா,
மருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தை செய்நன்னெஞ்சமே,
பொருந்துதண் புறவினிற்கொன்றைபொன்சொரிதரத்துன்
றுபைம்பூஞ், செருந்திசெம்பொன்மலர் திருநெல்வேலியுறை
செல்வர்தாமே. ௧

என்றுமோரியல்பினரெனநினைவரியவரேறதேறிச், செ
ன்றுதாஞ்செடிச்சியர்மனைதொறும்பலிகொளுமியல்பதுவே,
துன்றுதண்பொழினுழைந்தெழுவியகேதகைப்போதளைந்து
தென்றல்வந்துலவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. ௨

பெருந்தண்மாமலர்மிசையயனவனனையவர்பேணுகல்வித்
திருந்துமாமறையவர்திருநெல்வேலியுறைசெல்வர்தம்மைப்
பொருந்துநீர்த்தடமல்குபுகலியுண்ஞானசம்பந்தன்சொன்ன
வருந்தமிழ்மாலைகள்பாடியாடக்கெடுமருவினையே ௧௧

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டுத் தலம் ௧௪-ம் முற்றின.

## மலைநாடு.

# ௧. திருவஞ்சைக்களம்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண் -இந்தளம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தலைக்குத்தலைமாலையணிந்ததென்னேசடைமேற்கங்கை
வெள்ளந்தரித்ததென்னே, யலைக்கும்புலித்தோல்கொண்ட
சைத்ததென்னே யதன்மேற்கதநாகக்கச்சார்த்ததென்னே,
மலைக்குநிகரொப்பனவன்றிரைகள்வலித்தெற்றி முழங்கிவல
ம்புரிகொண், டலைக்குங்கட லங்கரைமேன்மகோதையணி
யார்பொழிலஞ்சைக்களத்தப்பனே. ௧

வெறுத்தேன்மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன்
விளங்குங்குழைக்காதுடைவேதியனே, யிறுத்தாயிலங்கைக்
கிறையாயவனைத்தலைபத்தொடுதோள்பலவிற்றுவிழக், கறுத்
தாய்கடனஞ்சமுதுண்டுகண்டங்கடுகப்பிரமன்றலையைந்திலு
மொன், றறுத்தாய் கடலங் கரைமேன்மகோதை யணியார்
பொழிலஞ்சைக்களத்தப்பனே. ௮

எந்தம்மடிகளிமையோர்பெருமானெனக்கென்று மளி
க்குமணிமிடற்ற, னந்தண்கடலங்கரைமேன்மகோதையணி
யார்பொழிலஞ்சைக்களத்தப்பனை, மந்தமுழவுங்குழலு
மியம்பும்வளர்நாவலர்கோனம்பியூரன்சொன்ன, சந்தம்மிகு
தண்டமிழ்மாலைகள்கொண்டடிவீழவல்லார்தடுபாரிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

## கொங்குநாடு.

# ௧. திருப்புக்கொளியூரவிநாசி.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி. எ-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

எற்றான்மறக்கேனெழுமைக்குமெம்பெருமானையே
யுற்றாயென்றுன்னையேயுள்குகின்றேனுணர்ந்துள்ளத்தாற்
புற்றாடரவாபுக்கொளியூரவிநாசியே
பற்றாகவாழ்வேன்பசுபதியேபரமேட்டியே. ௧

வழிபோவார்தம்மோடும்வந்துடன்கூடியமாணிநீ
யொழிவதழகோசொல்லாயருளோங்குசடையானே
பொழிலாருஞ்சோலைப்புக்கொளியூரிற்குளத்திடை
யிழியாக்குளித்தமாணியெனைக்கிறிசெய்ததே. ௨

எங்கேனும்போகினுமெம்பெருமானைநினைந்தக்காற்
கொங்கேபுகினுங்கூறைகொண்டாறலைப்பாரிலைப்
பொங்காடரவாபுக்கொளியூரவிநாசியே
யெங்கோனேயுனைவேண்டிக்கொள்வேன்பிறவாமையே. ௪

உரைப்பாருரையுகந்துள்கவல்லார்தங்களுச்சியா
யரைக்காடரவாவாதியுமந்தமுமாயினாய்
புரைக்காடுசோலைப்புக்கொளியூரவிநாசியே
கரைக்கான்முதலையைப்பிள்ளைதரச்சொல்லுகாலனையே. ௫

நீரேறவேறுநிமிர்புன்சடைநின்மலமூர்த்தியைப்
போரேறதேறியைப்புக்கொளியூரவிநாசியைக்
காரேறுகண்டனைத்தொண்டனாரூரன்கருதிய
சீரேறுபாடல்கள்செப்பவல்லார்க்கில்லைதுன்பமே. ௬

திருச்சிற்றம்பலம்.

---

# ௨. திருமுருகன்பூண்டி.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - பழம்பஞ்சுரம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கொடுகுவெஞ்சிலைவடுக வேடுவர்விரவலாமைசொல்லித்திடுகுமொட்டெனக்குத் திக்கூறைகொண்டாறலைக்குமிடம்முடுகுநாறியவடுகர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வா,யிடுகுநுண்ணிடைமங்கை தன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. ௧

வில்லைக்காட்டிவெருட்டிவேடுவர்விரவலாமை சொல்லிக், கல்லினாலெறிந்திட்டுமோதியுங் கூறைகொள்ளுமிடம், முல்லைத்தாதுமணங்கமழ்முருகன்பூண்டிமாநகர்வா, யெல்லைக்காப்பதொன்றில்லையாகினீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

முந்திவானவர் தாந்தொழுமுருகன்பூண்டிமாநகர்வாய்ப்
பந்தணைவிரற்பாவைதன்னையோர்பாகம்வைத்தவனைச்
சிந்தையிற்சிவதொண்டனூரனுரைத்தனபத்துங்கொண்
டெந்தம்மடிகளையேத்துவாரிடரொன்றுந்தாமிலரே. க

திருச்சிற்றம்பலம்.

---

# ந. திருநணா.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பந்தார்விரன்மடவாள்பாகமாநாகப்பூண்டேறேறி
யந்தாரரவணிந்தவம்மானிடம்போலுமந்தண்சாரல்
வந்தார்மடமந்திகூத்தாடவார்பொழிலில்வண்டுபாடச்[வே,
செந்தேன்றெளியொளிரத்தேமாங்கனியுதிர்க்குந்திருநணா க

நாட்டம்பொலிந்திலங்குநெற்றியினன்மற்றொருகைவீணையேந்தி
யீட்டுந்துயரறுக்குமெம்மானிடம்போலுமிலைசூழ்கானி
லோட்டந்தருமருவிவீழும்விசைகாட்டமுந்துமோசைச்
சேட்டார்மணிகளணியுந்திரைசேர்க்குந்திருநணாவே.

கல்வித்தகத்தாற்றிரைசூழ்கடற்காழிக்கவுணிசீரார்
நல்வித்தகத்தாலினிதுணருஞானசம்பந்தனெண்ணுஞ்
சொல்வித்தகத்தாலிறைவன்றிருநணாவேத்துபாடல்
வல்வித்தகத்தான்மொழிவார்பழியிலர்மண்ணின்மேலே.

திருச்சிற்றம்பலம்.

---

# ச. திருக்கொடிமாடச் செங்குன்றூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெந்தவெண்ணீறணிந்துவிரிநூறிகழ்மார்பினல்ல
பந்தணவும்விரலாளொருபாகமமர்ந்தருளிக்

கொந்தணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
வந்தணனைத்தொழுவாரவலமறப்பாரே.

அலைமலிதண்புனலோடரவஞ்சடைக்கணிந்தாக
மலைமகள்கூறுடையான்மலையாரிளவாழைக்
குலைமலிதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
தலைமகனைத்தொழுவார்தடுமாற்றறுப்பாரே. உ

அலைமலிதண்புனல்சூழ்ந்தழகார்புகலிந்நகர்பேணுந்
தலைமகனாகிநின்றதமிழ்ஞானசம்பந்தன்
கொலைமலிமூவிலையான்கொடிமாடச்செங்குன்றூரேத்து
நலமலிபாடல்வல்லார்வினையானநாசமே கக

திருச்சிற்றம்பலம்.

---

## ரு. திருவெஞ்சமாக்கூடல்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - கொல்லிக் கௌவாணம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

எறிக்குங்கதிர்வேயுதிர்முத்தமொடேலமிலவங்கந்தக்கோலமிஞ்சி, செறிக்கும்புனலுட்பெய்துகொண்டுமண்டித்திரைத்தெற்றுசிற்றாறதன்கீழ்க்கரைமேல், முறிக்குந்தழைமாமுடப்புன்னைஞாழல்குருக்கத்திகண்மேற்குயில்கூவலறா, வெறிக்குங்கலைமாவெஞ்சமாக்கூடல்விகிர்தாவடியேனையும்வேண்டுதியே. க

குளங்கள்பலவுங்குழியுந்நிறையக்குடமாமணிசந்தனமுமகிலுங், துளங்கும்புனலுட்பெய்துகொண்டுமண்டித்திரைத்தெற்றுசிற்றாறதன்கீழ்க்கரைமேல், வளங்கொண்மதில்மாளிகைகோபுரமுமணிமண்டபமுமிவைமஞ்சுதன்னுள், விளங்கும்மதிதோய்வெஞ்சமாக்கூடல்விகிர்தாவடியேனையும்வேண்டுதியே. உ

வஞ்சிநுண்ணிடையார்மயிற்சாயலன்னார் வடிவேற்கணல்லார்பலர்வந்திறைஞ்சும், வெஞ்சமாக்கூடல்விகிர்தாவடியேனையும்வேண்டுதியேயென்றுதான்விரும்பி, வஞ்சியா

தளிர்க்கும்வயலணிவலர்கோன் வனப்பகையப்பன் வன்றொண்
டன்சொன்ன,செஞ்சொற்றமிழ்மாலைகள்பத்தும்வல்லார்சிவ
லோகத் திருப்பதுதிண்ணமன்றே. க0

திருச்சிற்றம்பலம்.

---

## சூ. திருப்பாண்டிக்கொடுமுடி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

**பண் - காந்தாரம். உ-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமர்மேனியினாரும்பிறைபுல்குசெஞ்சடையாருங்
கண்ணமர்நெற்றியினாருங்காதமருங்குழையாரு
மெண்ணமருங்குணத்தாருமிமையவரேத்தநின்றாரும்
பண்ணமருமபாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. க

தளைக்கணிமாமலர்கொண்டுதாடொழுவாரவர்தங்கள்
வினைப்பகையாயினதீர்க்கும்விண்ணவர்விஞ்சையர்நெஞசி
னினைத்தெழுவார் துயர்தீர்ப்பார்திறைவனே மங்கைநடுங்கப்
பனைக்கைபகட்டுரிபோர்த்தார்பாண்டிக்கொடுமுடியாரே.

கலமல்குகண்கடல்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
பலமல்குவெண்டலையேந்திப்பாண்டிகொடுமுடிதன்னைச்
சொல்மலிபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார் துயர்தீர்ந்து
நலமல்குசிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

### திருநாவுக்கரசுநாயனார்.

**திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

சிட்டனைச்சிவனைச்செழுஞ்சோதியை
யட்டமூர்த்தியையாலநிழலமர்
பட்டனைத்திருப்பாண்டிக்கொடுமுடி
நட்டனைத்தொழநம்வினைநாசமே. க

பிரமன்மாலறியாதபெருமையன்
றருமமாகியதத்துவனெம்பிரான்

பரமனுறைபாண்டிக்கொடுமுடி
கருமமாகத்தொழுமடநெஞ்சமே. ௨

நெருக்கியம்முடிநின்றிசைவானவ
ரிருக்கொடும்பணிந்தேத்தவிருந்தவன்
றிருக்கொடுமுடியென்றலுந்தீவினைக்
கருக்கெடுமிதுகைகண்டயோகமே. ௯0

திருச்சிற்றம்பலம்..

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண்-பழம்பஞ்சுரம் ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக்கின்றிநின்றிருப்பாதமேமனம்பாவித்தேன்
பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்
கற்றவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே.

இட்டனும்மடியேத்துவாரிகழ்ந்திட்டநாண்மறந்திட்டநாள்
கெட்டநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரி
வட்டவாசிகைகொண்டடிதொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நட்டவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே.

ஓவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரிப்
பாவுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடி
நாவலாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே.

கோணியபிறைசூடியைக்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
பேணியபெருமானைப்பிஞ்ஞகப்பித்தனைப்பிறப்பில்லியைப்
பாணுலாவரிவண்டறைகொன்றைத்தாரனைப்படம்பாம்பரை
நாணனைத்தொண்டனூரன்சொல்லிவைசொல்லுவார்க்கில்லை
துன்பமே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# எ. திருக்கருவூரானிலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-இந்தளம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ்
சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை
யண்டனாருளியுமன்பரே. க

நீதியார்நினைந்தாயநான்மறை
யோதியாரொடுங்கூடலார்குழைக்
காதினார்கருவூருளானிலை
யாதியாரடியார்தமன்பரே. உ

உழுதுமாநிலத்தேனமாகிமா
ளுழுதுமாமலரோனுங்காண்கிலார்
கழுதினன்கருவூருளானிலை
முழுதுமாகியமூர்த்திபாதமே. ங

கந்தமார்பொழிற்காழிஞானசம்
பந்தன்சேர்கருவூருளானிலை
யெந்தையைச்சொன்னபத்தும்வல்லவர்
சிந்தையிற்றுயராயதீர்வரே. கக

திருச்சிற்றம்பலம்.

கொங்குநாட்டுத்தலம் எ-ம் முற்றின.

---

## நடுநாடு.

# க. திருநெல்வாயிலரத்துறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பியந்தைக்காந்தாரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. க

ஈரவார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமெய்தாச்சிதடர்கடொழச்செல்வதன்றால்
வாரிமாமலருந்திவருபுனனிவாயல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. ௨

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையும்பூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமாந்தர்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைப்பாட்டிவைபத்தும்வல்லார்க்கே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கடவுளைக்கடலுள்ளெழுநஞ்சுண்ட
வுடலுளானையொப்பாரியிலாதவெம்
மடலுளானையரத்துறைமேவிய
சுடருளானைக்கண்டீர்நாந்தொழுவதே. ௧

கரும்பொப்பானைக்கரும்பினிற்கட்டியை
விரும்பொப்பானைவிண்ணோருமறிகிலா
வரும்பொப்பானையரத்துறைமேவிய
சுரும்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. ௨

கலையொப்பானைக்கற்றார்க்கோரமுதினை
மலையொப்பானைமணிமுடியூன்றிய
வலையொப்பானையரத்துறைமேவிய
நிலையொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - இந்தளம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்கலந்துந்திவருநிவவின் கரைமேல், னெல்வாயிலரத்துறைநீடுறையுந்நிலவெண்மதிசூடி யதின்மலனே, நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்நரைத்

தாரிறந்தாரென்றுநானிலத்திற், சொல்லாய்க்கழிகின்றதறிந்
தடியேன்றொடர்ந்தேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே.

புற்றாடரவமரையார்த்துகந்தாய்புனிதாபொருவெள்ளி
டையூர்தியினை, யெற்றேயொருகண்ணிலனின்னையல்லானெல்
வாயிலாரத்துறைநின்மலனே, மற்றேலொருபற்றிலனெம்பெ
ருமான்வண்டார்குழலாண்மங்கைபங்கினனே, யற்றார்பிறவி
க்கடனீந்தியேறியடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே.

சிகரமுகத்திற்றிரளாரகிலும்மிகவுந்திவருந்நிவவின்கரை
மே, னிகரின்ம[illegible]ரவர்தாம்பயிலுநெல்வாயிலாரத்துறை
நின்மலனே, மகரக்குழையாய்மணக்கோலமதேபிணக்கோ
லமதாம்பிறவியிதுதா, னகரமுதலினெழுத்தாகிநின்றாயடியே
னுய்யப்போவதோர்சூழல்சொல்லே. ஏ

நீரூருநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலாரத்துறைநின்மல
னைத், தேரூர்நெடுவீதிநன்மாடமலிதென்னாவலர்கோனடித்
தொண்டனணி, யாரூரனுரைத்தனநற்றமிழின்மிகுமாலை
யோர்பத்திவைகற்றுவல்லார், காரூர்களிவண்டறையானை
மன்னரவராகியோர்விண்முழுதாள்பவரே. க0

திருச்சிற்றம்பலம்.

---

# உ. திருத்தூங்கானைமாடம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

**பண்-பழந்தக்கராகம். க-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

ஒடுங்கும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்
கையொழியத்தவ, மடங்குமிடங்கருதிநின்றீரெல்லாமடிகள
டிநிழற்கீழாளாம்வண்ணங், கிடங்குமதிலுஞ்சுலாவியெங்குங்
கெழுமனைகடோறுமறையின்னொலி, தொடங்குங்கடந்தைத்
தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. க

பிணிநீரசாதல்பிறத்தலிவைபிரியப்பிரியாதபேரின்பத்
தோ, டணிநீரமேலுலகமெய்தலுறிலறிமின்குறைவில்லையா
னேறுடை, மணிநீலகண்டமுடையபிரான்மலைமகளுந்தானு
மகிழ்ந்துவாழுந், துணிநீர்க்கடந்தைத்தடங்கோயில்சேர்தூ
ங்கானைமாடந்தொழுமின்களே. உ

மண்ணார்முழவதிருமாடவீதி வயற்காழிஞானசம்பந்தனல்ல, பெண்ணாகடத்துப்பெருங்கோயில்சேர்பிறையுரிஞ்சுந்தூங்கானைமாடமேயான், கண்ணார்கழல்பரவுபாடல்பத்துங்கருத்துணரக்கற்றாருங்கேட்டாரும்போய், விண்ணோருலகத்துமேவிவாழ்வம்விதியதுவேயாகும்வினைமாயுமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருவிருத்தம். ச-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார் திருவடிக்கொன்றுண்டுவிண்ணப்பம்போற்றிசெய்யு
மென்னாவிகாப்பதற்கிச்சையுண்டேலிருங்கூற்றகல
மின்னாருருவமிலேச்சூலமென்மேற்பொறிமேவுகொண்ட
நன்னார்கடந்தையுட்டூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே. க

ஆவாசிறுதொண்டனென்னினைந்தாயெனதருமபிணிநோய்
காவாதொழியிற்கலக்குமுன்மேற்பழிகாதல்செய்வார்
தேவாதிருவடிநீறென்னைப்பூசுசெந்தாமரையின்
பூவார்கடந்தையுட்டூங்கானைமாடத்தெம்புண்ணியனே. ௨

கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்றான்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோ [க
லிடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்
கடவுங்கடந்தையுட்டூங்கானைமாடத்தெந்தத்துவனே. கய

திருச்சிற்றம்பலம்.

---

# ௩. திருக்கூடலையாற்றூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - புறநீர்மை எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வடிவுடைமழுவேந்திமதகரியுரிபோர்த்துப்
பொடியணிதிருமேனிப்புரிகுழலுமையோடுங்
கொடியணிநெடுமாடக்கூடலையாற்றூரி
லடிகளிவ்வழிபோந்தவதிசயமறியேனே. க

வையகமுழுதுண்டமாலொடுநான்முகனும்
பையிளவரவல்குற்பாவையொடும்முடனே
கொய்யணிமலர்ச்சோலைக்கடலையாற்றாரி
லையனிவ்வழிபோந்தவதிசயமறியேனே. ௯

கடலையாற்றாரிற்கொடியிடையவளோடு
பாடலுகந்தானையதிசயமிதுவென்று
நாடியவின்றமிழானாவலூரன்சொற்
பாடல்கள்பத்தும்வல்லார்தம்வினைபற்றறுமே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## ௪. திருவெருக்கத்தம்புலியூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

படையார்தருபூதப்பகடாருரிபோர்வை
யுடையானுமையோடுமுடனாயிடுகங்கைச்
சடையானெருக்கத்தம்புலியூர்த்தகுகோயில்
விடையானடியேத்தமேவாவினைதானே. ௧

இலையார்தருசூலப்படையெம்பெருமானாய்
நிலையார்மதின்மூன்றுநீறாய்விழவெய்த
சிலையானெருக்கத்தம்புலியூர்த்திகழ்கோயிற்
கலையானடியேத்தக்கருதாவினைதானே. ௨

ஏராரெருக்கத்தம்புலியூருறைவானைச்
சீரார்திகழ்காழித்திருவார்சம்பந்த
னாராவருந்தமிழ்மாலையிவைவல்லார்
பாராரவரேத்தப்பதிவானுறைவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## ௫. திருத்தினைநகர்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி. எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நீறுதாங்கியதிருநுதலானை நெற்றிக்கண்ணனை நிறைவளைமடந்தை, கூறுதாங்கியகொள்கையினானைக் குற்றமில்லியைக் கற்றையஞ்சடைமேல், ஆறுதாங்கியவழகனையமரர்க்கரியசோதியைவரிவராலுகளுஞ், சேறுதாங்கியதிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே. ௧

வேந்தராயுலகாண்டறம்புரிந்துவீற்றிருந்தவிவ்வுடலிது தன்னைத், தேய்ந்திறந்துவெந்துயருழந்திடுமிப்பொக்கவாழ் வினைவிட்டிடுநெஞ்சே, பாந்தளங்கையிலாட்டுகந்தானைப் பரமனைக்கடற்சூர்தடிந்திட்ட, சேந்தர்தாதையைத்திருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே, ௬

நீடுபொக்கையிற்பிறவியைப்பழித்துநீங்கலாமென்று மனத்தினைத்தெருட்டிச், சேடுலாம்பொழிற்றிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினதிருவடியிணைதா, ளூடெலாம்புகழ்நாவலூராளிநம்பிவன்றொண்டனாரூரனுரைத்த, பாடலாந்தமிழ்பத்திவைவல்லார்முத்தியாவதுபரகதிப்பயனே. ௧௰

திருச்சிற்றம்பலம்.

---

## ௬. திருச்சோபுரம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-தக்கராகம். க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெங்கணானையீருரிவைபோர்த்துவிளங்குமொழி
மங்கைபாகம்வைத்துகந்தமாண்பதுவென்னைகொலாங்
கங்கையோடுதிங்கள்சூடிக்கடிகமழுங்கொன்றைத்
தொங்கலானேதூயநீற்றாய்சோபுரமேயவனே. ௧

விடையமர்ந்துவெண்மழுவொன்றேந்திவிரிந்திலங்கு
சடையொடுங்கத்தண்புனலைத்தாங்கியதென்னைகொலாங்
கடையுயர்ந்தமும்மதிலுங்காய்ந்தனலுள்ளழுந்தத்
தொடைநெகிழ்ந்தவெஞ்சிலையாய்சோபுரமேயவனே, ௨

சோலைமிக்கதண்வயல்சூழ்சோபுரமேயவனைச்
சீலமிக்கதொல்புகழார்சிரபுரக்கோனலத்தான்
ஞாலமிக்கதண்டமிழான்ஞானசம்பந்தன்சொன்ன
கோலமிக்கமாலைவல்லார்கூடுவர்வானுலகே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௭. திருவதிகைவீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - தக்கராகம். ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

குண்டைக்குறட்பூதங்குழுமவனலேந்திக்
கெண்டைப்பிறழ்தெண்ணீர்க்கெடிலவடபக்கம்
வண்டுமருள்பாடவளர்பொன்விரிகொன்றை
விண்டதொடையலானாடும்வீரட்டானத்தே ௧

அரும்புங்குரும்பையுமலைத்தமென்கொங்கைக்
கரும்பின்மொழியாளோடுடன்கையனல்வீசிச்
சுரும்புண்விரிகொன்றைச்சுடர்பொற்சடைதாழ
விரும்புமதிகையுளாடும்வீரட்டானத்தே. ௨

ஞாழல்கமழ்காழியுண்ஞானசம்பந்தன்
வேழம்பொருதெண்ணீரதிகைவீரட்டானத்துச்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை
வாழுந்துணையாகநினைவார்வினையிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### பண் - கொல்லி ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்கொடுமைபலசெய்தனநா
னறியேன், னேற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவ
னெப்பொழுதுந், தோற்றாதென்வயிற்றினகம்படியேகுட
ரோடுதொடக்கிமுடக்கியிட, வாற்றேனடியேனதிகைக்கெ
டில்வீரட்டானத்துறையம்மானே. ௧

நெஞ்சம்முமக்கேயிடமாகவைத்தேனினையாதொருபோதுமிருந்தறியேன், வஞ்சம்மிதுவொப்பதுகண்டறியேன்வயிற்றோடுதொடக்கிமுடக்கியிட, நஞ்சாகிவந்தென்னைநலிவதனைநணுகாமற்றுரந்துகரந்துமிடீ, ரஞ்சேலுமென்னீரதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. ௮

சலம்பூவொடுதூபமறந்தறியேன்றமிழோடிசைபாடன்மறந்தறியே, னலந்தீங்கிலுமுன்னைமறந்தறியேனுன்னாமமென்னாவின்மறந்தறியே, னுலந்தார்தலையிற்பலிகொண்டுழல்வாயுடலுள்ளுறுசூலைதவிர்த்தருளா, யலந்தேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. ௯

போர்த்தாயங்கோரானையினீருரிதோல்புறங்காடரங்காநடமாடவல்லா, யார்த்தானரக்கன்றனைமால்வரைக்கீழடர்த்திட்டருள்செய்தவதுகருதாய், வேர்த்தும்புரண்டும்விழுந்தெழுந்தாலென்வேதனையானவிலக்கியிடா, யார்த்தார்புனல்சூழதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

பண்-காந்தாரம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்சந்தனச்சாந்துஞ்சுடர்த்திங்கட்சூளாமணியும்
வண்ணவுரிவையுடையும்வளரும்பவளநிறமு
மண்ணலரண்முரணேறுமகலம்வளாயவரவுந்
திண்ணன்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. ௧

பூண்டதோர்கேழலெயிறும்பொன்றிகழாமைபுரளுங்
நீண்டதிண்டோள்வலஞ்சூழ்ந்துநிலாக்கதிர்போலவெண்ணூல்
காண்டகுபுள்ளின்சிறகுங்கலந்தகட்டங்கக்கொடியு
மீண்டுகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை. ௨

பலபலகாமத்தராகிப்பதைத்தெழுவார்மனத்துள்ளே
கலமலக்கிட்டுத்திரியுங்கணபதியென்னுங்களிறும்
வலமேந்திரண்டுசுடரும்வான்கயிலாயமலையு
நலமார்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை.

நரம்பெழுகைகள்பிடித்துநங்கைநடுங்கமலையை
யுரங்களெல்லாங்கொண்டெடுத்தானொன்பதுமொன்றுமலற
வரங்கள்கொடுத்தருள்செய்வான்வளர்பொழில்வீரட்டஞ்சூழ்ந்
நிரம்புகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை.

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முளைக்கதிரிளம்பிறைமூழ்கவெள்ளநீர்
வளைத்தெழுசடையினர்மழலைவீணையர்
திளைத்ததோர்மான்மறிக்கையர்செய்யபொன்
கிளைத்துழித்தோன்றிடங்கெடிலவாணரே. ௧

ஏறினரேறினையேழைதன்னொரு
கூறினர்கூறினர்வேதமங்கமு
மாறினராறிடுசடையர்பக்கமுஞ்
சீறினவுடையினர்கெடிலவாணரே. ௨

கிடந்தபாம்பருகுகண்டரிவைபேதுறக்
கிடந்தபாம்பவளையோர்பயிலென்றையுறக்
கிடந்தநீர்ச்சடைமிசைப்பிறையுமேங்கவே
கிடந்துதானகுதலைக்கெடிலவாணரே. ௮

பூண்டதோரரக்கனைப்பொருவின்மால்வரைத்
தூண்டுதோளவைபடவடர்த்ததாளினா
னீண்டுநீர்க்கமலவாய்மேதிபாய்தரக்
கீண்டுதேன்சொரிதருங்கெடிலவாணரே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

திருநேரிசை. ௪-திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நம்பனேயெங்கள்கோவேநாதனேயாதிமூர்த்தி
பங்கனேபரமயோகியென்றென்றேபரவிநாளுஞ்
செம்பொனேபவளக்குன்றேதிகழ்மலர்ப்பாதங்காண்பா
னன்பனேயலந்துபோனேனதிகைவீரட்டனீரே

கழித்திலேன்காமவெந்நோய்காதன்மையென்னும்பாச
மொழித்திலேனூன்கணோக்கிப்புணர்வெனுமிமைதிறந்து[டே
விழித்திலேன்வெளிறுதோன்றவினையெனுஞ்சரக்குக்கொண்
னழித்திலேனயர்த்துப்போனேனதிகைவீரட்டனீரே. ௭

திருச்சிற்றம்பலம்.

---

திருவிருத்தம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஆரட்டதேனுமிரந்துண்டகமகவன்றிரிந்து
வேரட்டநிற்பித்திடுகின்றதால்விரிநீர்ப்பரவைச்
சூரட்டவேலவன்றாதையைச்சூழ்வயலாரதிகை
வீரட்டத்தானைவிரும்பாவரும்பாவவேதனையே. ௫

படர்பொற்சடையும்பகுவாயரவும்பனிமதியுஞ்
சுடலைப்பொடியுமெல்லாமுளவேயவர்தூயதெண்ணீர்க்
கெடிலக்கரைத்திருவீரட்டராவர்கெட்டேனடைந்தார்
நடலைக்குநற்றுணையாகுங்கண்டீரவர்நாமங்களே. ௬

திருச்சிற்றம்பலம்.

---

ஏழைத்திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெறிவிரவுகூவிளநற்றொங்கலானைவீரட்டத்தானைவெள்
ளேற்றினானைப், பொறியரவினானைப்புள்ளூர்தியானைப்பொன்
னிறத்தினானைப்புகழ்தக்கானை, யறிதற்கரியசீரம்மான்றன்னை
யதியரையமங்கையமர்ந்தான்றன்னை, யெறிகெடிலத்தானையி
றைவன்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. ௧

உறிமுடித்தகுண்டிகைதங்கையிற்றூக்கியூத்தைவாய்ச்
சமணர்க்கோர்குண்டாக்கனாய்க், கறிவிரவுநெய்சோறுகையி
லுண்டுகண்டார்க்குப்பொல்லாதகாட்சியானேன், மறிதிரை
நீர்ப்பவ்வநஞ்சுண்டான்றன்னைமறித்தொருகால்வல்வினையே
னினைக்கமாட்டேன், னெறிகெடிலநாடர் பெருமான்றன்னை
யேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. ௮

திருச்சிற்றம்பலம்.

---

அடையாளத்திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சந்திரனையாகங்கைதிரையான்மோதச்சடாமகுடத்திருத்துமேசாமவேதக், கந்தருவம்விரும்புமேகபாலமேந்துகையனேமெய்யனேகனகமேனிப், பந்தணவுமெல்விரலாள்பாகனுமேபசுவேறுமேபரமயோகியாமே, மைந்தலையமாசுணங்கொண்டரையார்க்கும்மேயவனுகிலதிகைவீரட்டனுமே. க

மாலாகிமதமிக்ககளிறுதன்னைவதைசெய்துமற்றதனினுரிவைகொண்டு, மேலாலுங்கீழாலுந்தோன்றாவண்ணம்வெம்புலால்கைகலக்கமெய்போர்த்தானே, கோலாலம்படவரைநட்டரவுசுற்றிக்குரைகடலைத்திரையலறக்கடைந்துகொண்ட வாலாலமுண்டிருண்டகண்டத்தானையவனுகிலதிகைவீரட்டனுமே. அ

எழுந்ததிரைநதித்திவலைநனைந்ததிங்களிளநிலாத்திகழ்கின்றவளர்சடையனே, கொழும்பவளச்செங்கனிவாய்க்காமக்கோட்டிகொங்கையிணையமர்பொருதுகோலங்கொண்ட, தழும்புளவேவரைமார்பில் வெண்ணூலுண்டேசாந்தமொடுசந்தனத்தினளறுதங்கி, யழுந்தியசெந்திருவுருவில் வெண்ணீற்றனையவனுகிலதிகைவீரட்டனுமே. கய

திருச்சிற்றம்பலம்.

---

போற்றித்திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

எல்லாஞ்சிவனென்னநின்றாய்போற்றி யெரிசுடராய்நின்றவிறைவாபோற்றி, கொல்லார்மழுவாட்படையாய்போற்றிகொல்லுங்கூற்றொன்றை யுதைத்தாய்போற்றி, கல்லாதார்காட்சிக்கரியாய்போற்றிகற்றாரிடும்பை களைவாய்போற்றி, வில்லால்வியனரணமெய்தாய்போற்றிவீரட்டங்காதல்விமலாபோற்றி. க

திருச்சிற்றம்பலம்.

---

திருவடித்திருத்தாண்டகம், ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அரவணையான்சிந்தித்தரற்றுமடியருமறையான்சென்னிக்கணியாமடி, சரவணத்தான்கைதொழுதுசாரும்மடிசா

ர்ந்தார்கட்கெல்லாஞ்சரணமடி, பரவுவார்பாவம்பறைக்கும் படிபதினெண்கணங்களும்பாடும்படி, யிரவுநீர்த்தென்கெடில நாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. ௯

அரும்பித்தசெஞ்ஞாயிறேய்க்கும்மடி யறிகெழுதலாகா வருட்சேவடி, சுரும்பித்தவண்டினங்கள்சூழ்ந்தவடி சோமனையுங்காலனையுங்காய்ந்தவடி, பெருப்பித்தர் கூடிப்பிதற்றும் மடிபிழைத்தார்பிழைப்பறியவல்லவடி, திருந்துநீர்த்தென் கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - கொல்லிக்கௌவாணம். ௭- ந்திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தம்மானையறியாதசாதியாருளரே சடைமேற்கொள்பிறையானைவிடைமேற்கொள்விகிர்தன், கைம்மாவினுரியானைக் கரிகாட்டிலாட்டுடையானைவிடையானைக் கறைகொண்டகண்டத், தெம்மான்றனடிக்கொண்டென்முடிமேல் வைத்திடுமென்னுமாசையால்வாழ்கின்றவறிவிலாநாயேனெம்மானை யெறிகெடிலவடவீரட்டானத்துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே. ௧

பொன்னானமயிலூர்திமுருகவேள்தாதைபொடியாடு திருமேனிநெடுமாறன்முடிமேற், றென்னனைக்குடபாலின்வடபாலின்குணபாற் சேராதசிந்தையான் செக்கர்வானந்தி, யன்னானையமரர்கடம்பெருமானைக் கருமானினுரியானையதிகைமாநகருள்வாழ்பவனை, யென்னானையெறிகெடிலவடவீரட்டானத்துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே. ௮

என்பினையேகலனாகவணிந்தானையெங்களெருதேறும் பெருமானையிசைஞானிசிறுவன், வன்பனையவளர்பொழில் சூழ்வயனாவலூர்க்கோன்வன்றொண்டனாரூரன்மதியாதுசொன்ன, வன்பனை யாவர்க்கு மறிவரியவத்தர்பெருமானையதிகைமாநகருள்வாழ்பவனை, யென்பொன்னையெறிகெடில்வட வீரட்டானத்துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே.

திருச்சிற்றம்பலம்.

---

## அ. திருநாவலூர்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-நட்டராகம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினு
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே. க

தன்மையினாலடியேனைத்தாமாட்கொண்டநாட்சபைமுன்
வன்மைகள்பேசிடவன்றொண்டனென்பதோர்வாழ்வுதந்தார்
புன்மைகள்பேசவும்பொன்னைத்தந்தென்னைப்போகம்புணர்த்த
நன்மையினார்க்கிடமாவதுநந்திருநாவலூரே. உ

வாயாடிமாமறையோதியோர்வேதியனாகிவந்து
தீயாடியார்சினக்கேழலின்பின்சென்றோர்வேடுவனாய்
வேயாடியார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்
நாயாடியார்க்கிடமாவதுநந்திருநாவலூரே. [கொண்ட

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செயுமூரணிநாவலூரென்
றோதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## கூ. திருமுதுகுன்றம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மத்தாவரைநிறுவிக்கடல்கடைந்தவ்விடமுண்ட
தொத்தார்தருமணிநீண்முடிச்சுடர்வண்ணனதிடமாங்
கொத்தார்மலர்குளிர்சந்தகிலொளிர்குங்குமங்கொண்டு
முத்தாறுவந்தடிவீழ்தருமுதுகுன்றடைவோமே.

வினையாயினதோர்பரிசில்வருபசுபாசவேதனையொண்
டனையாயினதவிரவ்வருடலைவுன்னதுசார்வாங்

களையார் தருகதிராயிரமுடையவ்வவனோடு
முளைமாமதிதவழும்முயர்முதுகுன்றடைவோமே. ௰

முகில்சேர்தருமுதுகுன்றுடையானைம்மிகுதொல்சீர்ப்
புகலிந்நகர்மறைஞானசம்பந்தனுரைசெய்த
நிகரில்லனதமிழ்மாலைகளிசையோடிவைபத்தும்
பகருமடியவர்கட்கிடர்பாவம்படையாவே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

பண்-மேகராகக்குறிஞ்சி ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மெய்த்தாறுசுவையுமேழிசையுமெண்குணங்களும்விரும்பும்நால்வே, தத்தாலுமறிவொண்ணாநடைதெளியப்பளிங்கேபோலரிவைபாக, மொத்தாறுசமையங்கட்கொருதலைவன்கருதுமூருலவுதெண்ணீர், முத்தாறுவெதிருதிரநித்திலம்வாரிக்கொழிக்குமுதுகுன்றமே. ௧

தக்கனதுபெருவேள்விச்சந்திரனிந்திரனெச்சனருக்கனங்கி, மிக்கவிதா தாவினொடும் விதிவழியே தண்டித்தவிமலர்கோயில், கொக்கினியகொழும்வருக்கைகதலிகமுகுயர்தெங்கின்குலைகொள்சோலை,முக்கனியின்சாறொழுகிச்சேறுலராநீள்வயல்சூழ்முதுகுன்றமே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கருமணியைக்கனகத்தின்குன்றொப்பானைக்கருதுவார்க்காற்றவெளியான்றன்னைக்,குருமணியைக்கோளரவமாட்டுவானைக்கொல்வேங்கையதளானைக்கோவணவன்றன்னை, யருமணியையடைந்தவர்கட்கமுதொப்பானையானஞ்சுமாடியைநானபயம்புக்க,திருமணியைத்திருமுதுகுன்றுடையான்றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவாறே. ௧

இகழ்ந்தானையிருபதுதோணெரியவூன்றியெழுநரம்பினிசைபாடவினிதுகேட்டுப்,புகழ்ந்தானைப்பூந்துருத்திமேயான்

றன்னைப் புண்ணியனை விண்ணவர்க ணிதியந்தன்னை,மகிழ்ந்
தானைமலைமகளோர்பாகம் வைத்தவளர்மதியஞ் சடையைத்
தமாலோர்பாகந், திகழ்ந்தானைத்திருமுதுகுன் றுடையான்
றன்னைத்தீவினையேனறியாதே திகைத்தவாறே. கo

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொன்செய்தமேனியினீர்புலித்தோலையரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலுமெரித்தீர்முதுகுன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள்பரவையிவடன்முகப்பே
யென்செய்தவாறடிகேளடியேனிட்டளங்கெடவே. க

உம்பரும் வானவருமுடனேநிற்கவேயெனக்குச்
செம்பொன்னைத்தந்தருளித்திகழும்முதுகுன்றமர்ந்தீர்
வம்பமருங்குழலாள்பரவையிவள்வாடுகின்று
ளெம்பெருமானருளீரடியேனிட்டளங்கெடவே. உ

எத்தாதிருந்தறியேனிமையோர்தனிநாயகனே
முத்தாயுலருக்செல்வாமுதுகுன்றமமர்ந்தவனே
மத்தாருங்குழலாள்பரவையிவடன்முகப்பே
கூத்தாதந்தருளாய்கொடியேனிட்டளங்கெடவே. அ

பிறையாருஞ்சடையெம்பெருமானருளாயென்று
முறையால்வந்தமரர்வணங்கும்முதுகுன்றர்தம்மை
மறையார்தஞ்சூரிசில்வயலூரன்சொன்ன
விறையார்பாடல்வல்லார்க்கெளிதாஞ்சிவலோகமதே. கo

திருச்சிற்றம்பலம்.

---

# கo. திருநெல்வெண்ணெய்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

திருமுக்கால்.

பண்-சாதாரி. கூ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நல்வெண்ணெய்விழுதுபெய்தாடுதிர்நாடொறு
நெல்வெண்ணெய்மேவியநீரே

நெல்வெணெய்மேவியநீருமைநாடொறுஞ்
சொல்வணமிடுவதுசொல்லே க

நச்சலுமடியவர்தொழுதெழுநெல்வெணெய்க்
கச்சிளவரவசைத்தீரே
கச்சிள்வரவசைத்தீருமைக்காண்பவ
ரச்சமோடருவினையிலரே. ௨

நிலமல்குதொல்புகழ்நெல்வெணெயீசனை
நலமல்குஞானசம்பந்த
னலமல்குஞானசம்பந்தனசெந்தமிழ்
சொலமல்குவார்துயரிலரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# கக. திருக்கோவலூர் வீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். உ- திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

படைகொள்கூற்றம்வந்துமெய்ப்பாசம்விட்டபோதின்க
ணிடைகொள்வாரெமக்கிலையெழுகபோதுநெஞ்சமே
குடைகொள்வேந்தன்மூதாதைகுழகன்கோவலூர்தனுள்
விடையதேறுங்கொடியினான்வீரட்டானஞ்சேர்துமே. க

கனைகொளிருமல்சூலைநோய்கம்பதாளிகுன்மமு
மினையபலவுமூப்பினோடெய்திவந்துநலியாமுன்
பனைகளுலவுபைம்பொழிற்பழனஞ்சூழ்ந்தகோவலூர்
வினையைவென்றவேடத்தான்வீரட்டானஞ்சேர்துமே. ௨

கழியொடுலவுகானல்சூழ்காழிஞானசம்பந்தன்
பழிகடீரச்சென்னசொற்பாவநாசமாதலா
லழிவிலீர்கொண்டேத்துமினந்தண்கோவலூர்தனில்
விழிகொள்பூதப்படையினான்வீரட்டானஞ்சேர்துமே. கக

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனர்.

திருநேரிசை. ச-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

செத்தையேன்சிதம்பநாயேன்செடியனேனழுக்குப்பாயும்
பொத்தையேபோற்றி நாளும்புகலிடமறியமாட்டே
னெத்தைநான்பற்றிநிற்கேனிருளறநோக்கமாட்டாக்
கொத்தையேன்செய்வதென்னேகோவல்வீரட்டனீரே. க

வழித்தலைப்படவுமாட்டேன்வைகலுந்தூய்மைசெய்து
பழித்திலேன்பாசமற்றுப்பரமநான்பரவமாட்டே
னிழித்திலேன்பிறவிதன்னையென்னினைந்திருக்கமாட்டேன்
கொழித்துவந்தலைக்குந்தெண்ணீர்க்கோவல்வீரட்டனீரே. ௩

திருச்சிற்றம்பலம்.

---

# கஉ. திருஅறையணிநல்லூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பண் - காந்தாரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பீடினாற்பெரியோர்களும்பேதைமைகெடத்தீதிலா
வீடினாலுயர்ந்தார்களும்வீடிலாரிளவெண்மதி
சூடினார்மறைபாடினார்சுடலைநீறணிந்தாரழ
லாடினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. க

இலையினார்சூலமேறுகந்தேறியேயிமையோர்தொழ
நிலையினாலொருகாலுறச்சிலையினான்மதிலெய்தவ
னலையினார்புனல்சூடியவண்ணலாரறையணிநல்லூர்
தலையினாற்றொழுதோங்குவார்நீங்குவார்தடுமாற்றமே. உ

கழிலாங்கடற்கானல்சூழ்கழுமலமமர்தொல்பதிப்
பழியிலாமறைஞானசம்பந்தனல்லதோர்பண்பினார்
மொழியினாலறையணிநல்லூர்முக்கண்மூர்த்திதன்றாடொழக்
கெழுவினாரவர்தம்மொடுங்கேடில்வாழ்பதிபெறுவரே. க0

திருச்சிற்றம்பலம்.

# கங. திருஇடையாறு.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-கொல்லி. ஏ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முந்தையூர்முதுகுன்றங்குரங்கணின்முட்டஞ்
சிந்தையூர்நன்றுசென்றடைவான்றிருவாரூர்
பந்தையூர்பழையாறுபழனம்பைஞ்ஞீலி
யெந்தையூரெய்தமானிடையாறிடைமருதே. க

சுற்றுமூர்சுரியறிருச்சோபுரங்கொண்ட
ரொற்றுமூரொர்றியூர்திருவூறலொழியாப்
பெற்றமேறிபெண்பாதியிடம்பெண்ணைத்தெண்ணீ
ரெற்றுமூரெய்தமானிடையாறிடைமருதே. உ

ஊறிவாயனநாடியவன்றொண்டனூரன்
றேறுவார்சிந்தைதேறுமிடஞ்செங்கண்வெள்ளே
றேறுவாரெய்தமானிடையாறிடைமருதைக்
கூறுவார்வினையெவ்விடமெய்குளிர்வாரே. க0

திருச்சிற்றம்பலம்.

---

# கச. திருவெண்ணெய்நல்லூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் -இந்தளம். ஏ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை [டுறையு
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

நாயேன்பலநாளுநினைப்பின்றிமனத்துன்னை
பேயாய்த்திரிந்தெய்த்தேன்பெறலாகாவருள்பெற்றேன்
வேயார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாயாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

மன்னேமறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னைப்
பொன்னேமணிதானேவயிரமேபொருதுந்தி

சின்னஞ்சிறு பெண்ணைத் தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளண்ணலேயுனக்காளாயினி யல்லேனெனலாமே ௯

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச்
சீரூர்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே. ௧0

திருச்சிற்றம்பலம்.

# ௧௫. திருத்துறையூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மலையாரருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. ௧

மத்தம்மதயானையின்வெண்மருப்புந்தி
முத்தங்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
பத்தர்பயின்றேத்திப்பரவுந்துறையூ
ரத்தாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. ௨

செய்யார்கமலம்மலர்நாவலூர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந்துறையூர்மேற்
பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கடவநெறிதானே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

# ௧௬. திருவடுகூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சுடுகூடெரிமாலையணிவர்சுடர்வேலர்
கொடுகூர்மழுவாளொன்றுடையார்விடையூர்வர்

கடுகூர்பசிகாமங்கவலைபிணியில்லார்
வடுகூர்புனல்சூழ்ந்தவடுகூரடிகளே. ௯

பாலுநறுநெய்யுந்தயிரும்பயின்றாடி
யேலுஞ்சுடுநீறுமென்புமொளிமல்கக்
கோலம்பொழிற்சோலைகூடிபடவன்ன
மாலும்வடுகூரிலாடுமடிகளே. ௨

படிநோன்பவையாவர்பழியில்புகழான
கடிநாணிசழ்சோலைகமழும்வடுகூரைப்
படியானசிந்தைமொழியார்சம்பந்த
னடிஞானம்வல்லாரடிசேர்வார்களே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௭. திருமாணிகுழி

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

திருவிராகம். பண்-சாதாரி ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொன்னியல்பொருப்பரையன் மங்கையொருபங்கர்புனறங்குசடைமேல், வன்னியொடுமத்தமலர்வைத்தவிறல்வித்தகர்மகிழ்ந்துறைவிடங், கன்னியிளவாளைகுதிகொள்ளவிளவள்ளைபடரள்ளல்வயல்வாய், மன்னியிளமேதிகள்படிந்துமனைசேருதவிமாணிகுழியே. ௧

நித்தநியமத்தொழிலனாகிநெடுமால்குறளனாகிமிகவுஞ்
சித்தமதொருக்கிவழிபாடுசெயநின்றசிவலோகனிடமாங்
கொத்தலர்மலர்ப்பொழிலினீடுகுலமஞ்ஞைநடமாடலதுகண்
டொத்தவரிவண்டுகளுலாவியிசைபாடுதவிமாணிகுழியே. ௨

உந்திவருதண்கெடிலமோடுபுனல்சூழுதவிமாணிகுழிமே
லந்திமதிசூடியவெம்மானையடிசேருமணிகாழிநகரான்
சந்தநிறைதண்டமிழ்தெரிந்துணருஞானசம்பந்தனதுசொன்
முந்தியிசைசெய்துமொழிவார்களுடையார்கணெடுவானகிலமே.

திருச்சிற்றம்பலம்.

# ௧௮. திருப்பாதிரிப்புலியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - செவ்வழி. ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றமுடக்கான்முயற்கருள்செய்துநீள்
புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள்
பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே. ௧

கொள்ளிநக்கபகுவாயபேய்கள்குழைந்தாடவே
முள்ளிலவம்முதுகாட்டுறையும்முதல்வன்னிடம்
புள்ளினங்கள்பயிலும்பாதிரிப்புலியூர்தனை
யுள்ளநம்மேல்வினையாயினவொழியுங்களே. ௨

அந்தணல்லாரகன்காழியுண்ஞானசம்
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தார்கண்மேல்
வந்துதீயவ்வடையாமையால்வினைமாயுமே. ௩

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு நாயனார்.

திருவிருத்தம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க
வேன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே ௧

கருவாய்க்கிடந்துன்கழலேநினையுங்கருத்துடையே
னுருவாய்த்தெரிந்துன்றனாமம்பயின்றேனுனதருளாற்
றிருவாய்ப்பொலியச்சிவாயநமவென்றுநீறணிந்தேன்
றருவாய்சிவகதிநீபாதிரிப்புலியூரரனே. ௬

புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருள்செய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேல்வைத்ததீவண்ணனே. ௮

மண்பாதலம்புக்குமால்கடன்மூடிமற்றேழுலகும்
விண்பாறிசைகெட்டிருசுடர்வீழினுமஞ்சனெஞ்சே
திண்பானமக்கொன்றுகண்டோந்திருப்பாதிரிப்புலியூர்க்
கண்பாவுநெற்றிக்கடவுட்சுடரான்கழலிணையே. கூ

திருந்தாவமணர்தந்நெறிப்பட்டுத்திகைத்தமுத்தி
தருந்தாளிணைக்கேசரண்புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய்பாதிரிப்புலியூ
ரிருந்தாயடியேனினிப்பிறவாமல்வந்தேன்றுகொள்ளே. க0

திருச்சிற்றம்பலம்.

---

## ககூ. திருமுண்டீச்சரம்.

### திருநாவுக்கரசுநாயனார்.

திருத்தாண்டகம். சூ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஆர்த்தான்காணழுனைகமறைக்குநாணுவடியவர்கட்கன்பன்காணனைத்தோலப், போர்த்தான்காண்புரிசடைமேற்புனலேற்றான்காண் புறங்காட்டிலாடல் புரிந்தான்றான்காண், காத்தான்காணுலகேழுங்கலங்காவண்ணங் கனைகடல்வாய்நஞ்சதனைக்கண்டத்துள்ளே, சேர்த்தான்காண்டிருமுண்டீச்சரத்துமேயசிவலோகன்காணவனென்சிந்தையானே. க

அறுத்தவன்காணடியவர்களல்லலெல்லாமருப்பொருளாய்நின்றவன்காணநங்கனுகை, மறுத்தவன்காண்மலைதன்னைமதியாதோடிமலைமகடன்மனநடுங்கவானோரஞ்சக்,கறுத்தவனைக்கயிலாயமெடுத்தான்கைபுங்கதிர்முடியுங்கண்ணும்பிதுங்கியோடச்,செறுத்தவன்காண்டிருமுண்டீச்சரத்துமேயசிவலோகன்காணவனென்சிந்தையானே. க0

திருச்சிற்றம்பலம்.

---

## உ0. திருப்புறவார்பனங்காட்டூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விண்ணமர்ந்தனமும்மதில்களைவீழவெங்கணையாலெய்தாய்விரி
பண்ணமர்ந்தொலிசேர்புறவார்பனங்காட்டூர்ப்

பெண்ணமர்ந்தொருபாகமாகியபிஞ்ஞகாபிறைசேர் நுதலி
சகண்ணமர்ந்தவனேகலந்தார்க்கருளாயே. [டைக் க

நீடல்கோடலலரவெண்முல்லைநீர்மலர்நிரைத்தாதளஞ்செயப்
பாடல்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்த்
தோடிலங்கியகாதயன்மின்றுளங்கவெண்குழைதுள்ளநள்ளிரு
ளாடுஞ்சங்கரனேயடைந்தார்க்கருளாயே. உ

மையினார்மணிபோன்மிடற்றனைமாசில்வெண்பொடிப்பூசுமார்ப
பையதேன்பொழில்சூழ்புறவார்பனங்காட்டூ [னைப்
ரையனைப்புகழானகாழியுளாய்ந்தநான்மறைஞானசம்பந்தன்
செய்யுள்பாடவல்லார்சிவலோகஞ்சேர்வாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# உக. திருவாமாத்தூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-சீகாமரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

குன்றவார்சிலைநாணராவரிவாளிகூரெரிகாற்றின்முப்பதில்
வென்றவாறெங்ஙனேவிடையேறும்வேதியனே [மே
தென்றலார்மணிமாடமாளிகைசூளிகைக்கெதிர்நீண்டபெண்ணை
லன்றில்வந்தணையுமாமாத்தூரம்மானே க

பரவிவானவர்தானவர்பலருங்கலங்கிடவந்தகார்விடம்
வெருவவுண்டுகந்தவருளென்கொல்விண்ணவனே
கரவின்மாமணிபொன்கொழித்திழிசந்துகாரகிறந்துபம்பைநீ
ரருவிவந்தலைக்குமாமாத்தூரம்மானே. உ

வாடல்வெண்டலைமாலையார்த்துமயங்கிருள்ளெரியேந்திமாநட
மாடும்மேயதென்னென்றுமாத்தூரம்மானைக் [பந்தன்
கோடனாகமரும்புபைம்பொழிற்கொச்சையாரிறைஞானசம்
பாடல்பத்தும்வல்லார்பரலோகஞ்சேர்வாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம். கூ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வண்ணங்கடாம்பாடிவந்துநின்றுவலிசெய்துவளைகவர்ந்
தார்வகையானம்மைக், கண்ணம்பானின்றெய்துகழலப்பே
சிக்கடியதோர்விடையேறிக்காபாலியார், சுண்ணங்கடாங்
கொண்டுதுதையப்பூசித்தோலுடுத்துநூல்பூண்டு தோன்றத்
தோன்ற, வண்ணலார்போகின்றார்வந்துகாணீரழகியரேடா
மாத்தூரையனாரே. க

ஒன்றாலுங்குறைவில்லையூர்திவெள்ளே றேற்றியூரும்
ஏறேயுணாக்கூடீர், நின்றுதானென்செய்வீர் போவீராகி
னொற்றிமேற்கண்காட்டிநிறையுங்கொண்டீ; ரென்றுதானிவ்
வகையேயிடர்செய்கின்றீ ரிருக்குமூரினியறிந்தோமேகப்ப
மோ, வன்றித்தான்போகின்றீரடிகளெம்மோடழகியரேயா
மாத்தூரையனாரே. அ

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - கொல்லிக்கௌவாணம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

காண்டனன்காண்டனன்காரிகையாடன்கருத்தனை
யாண்டனனாண்டனனாமாத்தூரெம்மடிகட்காட் [கண்
பூண்டனன்பூண்டனன்பொய்யன்றுசொல்லுவன்கேண்மின்
மீண்டனன்மீண்டனன்வேதவித்தல்லாதவர்கட்கே. க

பாடுவன்பாடுவன்பார்ப்பதிதன்னடிபற்றிநான்
றேடுவன்றேடுவன்றிண்ணெனப்பற்றிச்செறிதர
வாடுவனாடுவனாமாத்தூரெம்மடிகளைக்
கூடுவன்கூடுவன்குற்றமதற்றென்குறிப்போடே உ

ஐயனையத்தனையாளுடையாமாத்தூரண்ணலை
மெய்யனைமெய்யர்க்குமெய்ப்பொருளானவிமலனை
மையனைமையணிகண்டனைவன்றொண்டனூரன்சொற் [கக
பொய்யொன்றுமின்றிப்புலம்புவார்பொற்கழல்சேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௨. திருவண்ணாமலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - நட்டபாடை. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே. ௧

தேமாங்கனிகடுவன்கொளவிடுகொம்பொடுதீண்டித்
தூமாமழைதுறுவன்மிசைசிறுநுண்டுளிசிதற
வாமாம்பிணையணையும்பொழிலண்ணாமலையண்ணல்
பூமான்கழல்புனைசேவடிநினைவார்வினையிலரே. ௨

விளவார்கனிபடநூறியகடல்வண்ணனும்வேதக்
கிளர்தாமரைமலர்மேலுறைகேடில்புகழோனு
மளவாவணமழலாகியவண்ணாமலையண்ண
றளராமுலைமுறுவல்லுமைதலைவன்னடிசரணே. ௯

வெம்புந்தியகதிரோனொளிவிலகும்விரிசார
லம்புந்திமூவெயிலெய்தவனண்ணாமலையதனைக்
கொம்புந்துவகுயிலாலுவகுளிர்காழியுண்ஞான
சம்பந்தனதமிழ்வல்லவரடிபேணுதறவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

### பண் - தக்கேசி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்க
மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார் [ள்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடு
மாமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. ௧

மஞ்சைப்போழ்ந்தமதியஞ்சூடும்வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத்தடக்குமதவுநன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும்வேடர்மடவாரிதணமதுவேறி
யஞ்சொற்கிளிகளாயோவென்னுமண்ணாமலையாரே. ௨

ஞானத்திரளாய்நின்றபெருமானல்லவடியார்மே
லூனத்திரளைநீக்குமதுவுமுண்மைப்பொருள்போலு
மேனத்திரளோடினமான்கரடியிழியுமிரவின்க
ணானைத்திரள்வந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. ௲

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்

### திருநேரிசை ச-ந்திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஓதிமாமலர்கடூவியுமையவள்பங்காமிக்க
சோதியேதுளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினானே
யாதியேயமரர்கோவேயணியணாமலையுளானே
நீதியானின்னையல்லானினையுமாநினைவிலேனே. க

இரவியுமதியும்விண்ணுமிருநிலம்புனலுங்காற்று
முரகமார்பவனமெட்டுந்திசையொளியுருவமானா
யரவுமிழ்மணிகொள்சோதியணியணாமலையுளானே
பரவுநின்பாதமல்லாற்பரமனான்பற்றிலேனே. எ

இரக்கமொன்றியாதுமில்லாக்காலனைக்கடிந்தவெம்மா
னுரத்தினால்வரையையூக்கவொருவிரனுதியினாலே
யரக்கனைநெரித்தவண்ணாமலையுளாயமரரேறே
சிரத்தினால்வணங்கியேத்தித்திருவடிமறப்பிலேனே. க0

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வட்டனைமதிசூடியைவானவர்
சிட்டனைத்திருவண்ணாமலையனை
யிட்டனையிகழ்ந்தார்புரமூன்றையு
மட்டனையடியேன்மறந்துய்வனோ. க

வானனைமதிசூடியமைந்தனைத்
தேனனைத்திருவண்ணாமலையனை

யேனனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
வானனையடியேன்மறந்துய்வனே. ௨

அரக்கனையலறவ்விரலூன்றிய
திருத்தனைத்திருவண்ணாமலையனை
யிரக்கமாயென்னுடலுறுநோய்களைத்
துரக்கனைத்தொண்டனேன்மறந்துய்வனே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. ௫-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பட்டியேறுகந்தேறிப்பலவில
மிட்டமாகவிரந்துண்டுழிதரு
மட்டமூர்த்தியண்ணாமலைகைதொழக்
கெட்டுப்போம்வினைகேடில்லைகாண்மினே. ௧

பெற்றமேறுவர்பெய்பலிக்கென்றவர்
சுற்றமாமிருசொல்புகழாளொடு
மற்றந்திர்க்குமண்ணாமலைகைதொழ
நற்றவத்தொடுஞானத்திருப்பரே. ௨

மறையினானொடுமாலவன்காண்கிலா
நிறையுநீர்மையுநின்றருள்செய்தவ
னுறையுமாண்பினண்ணாமலைகைதொழப்
பறையுநாஞ்செய்தபாவங்களானவே ௧௦

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டுத்தலங்கள் ௨௨-ம் முற்றின.

---

## தொண்டைநாடு.

# ௧. திருக்கச்சியேகம்பம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - மேகராகக்குறிஞ்சி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெந்தவெண்பொடிப்பூசுமார்பின்விரிநூலொருபால்பொரு
கந்தமல்குகுழலியொடுங்கடிபொழிற்கச்சிதன்னு [ந்தக்
ளந்தமில்குணத்தாரவர்போற்றவணங்கினொடாடல்புரி
யெந்தைமேவியவேகம்பந்தொழுதேத்தவிடர்கெடுமே. ௧

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன் மாய்ந்தவியச்சரந்
துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயவிடங்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவந்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. ௨

ஏரிணர்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரிணர்மணிமாடமோங்குகழுமலநன்னகருட்
பாரிணர்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்தும்வல்லார்
சீரிணர்புகழோங்கிவிண்ணவரோடுஞ்சேர்பவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

பண் - இந்தளம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதென்னதுள்ளமே. ௧

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிளம்
முச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பமேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினும்மேல்வினைநையுமே. ௨

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்
கந்தண்பூங்காழியூரன்கலிக்கோவையாற்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

திருவிருக்குக்குறள். பண் - கொல்லி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கருவார்கச்சித், திருவேகம்பத்
தொருவாவென்ன, மருவாவினையே ௧

மதியார்கச்சி, நதியேகம்பம்
விதியாலேத்தப், பதியாவாரே. ௨

கரியின்னுரியன், றிருவேகம்பன்
பெரியபுரமூன், றெரிசெய்தானே. ௭

மறையோன்ரியு, மறியாவனலன்
னெறியேகம்பங், குறியாற்றொழுமே. க0

கொச்சைவேந்தன், கச்சிக்கம்ப
மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருவியமகம். ங-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமே லொருபாகனே, தூயவானவர்வேதத்துவனியேசோதிமா லெரிவேதத்துவனியே, யாயுநன்பொருணும்பொருளாதி யேயாலனீழல்வரும்பொருளாதியே, காயவின்மதன்பட்டது கம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. க

கந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதல்செய்பவர்தீர்த் திடுகம்பமே, புந்திசெய்தாவிரும்பிப்புகலியே பூசுரன்றன் விரும்பிப்புகலியே, யந்தமில்பொருளாயினகொண்டுமேயண் ணலின்பொருளாயினகொண்டுமே, பந்தனின்னியல்பாடியப த்துமேபாடவல்லவராயினபத்துமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

பண் - காந்தாரம் சு-ந் திருமுறை.

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
யரவாடச்சடைதாழவங்கையிலனலேந்தி
யிரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. க

தேனைக்குங்கிளிமழலையுமைகேள்வன்செழும்பவளந்
தானைக்குந்திருமேனிதழலுருவாஞ்சங்கரனை
வானைக்கும்வளர்மதிசேர்சடையானைவானோர்க்கு
மேனோர்க்கும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. உ

கைப்போதுமலர்தூவிக்காதலித்துவானோர்கண்
முப்போதுமுடிசாய்த்துத்தொழநின்றமுதல்வனை
யப்போதுமலர்தூவியைம்புலனுமகத்தடக்கி
யெப்போதுமினியானையென்மனத்தேவைத்தேனே. ங

அடுத்தானையுரித்தானை யருச்சுனற்குப்பாசுபதங்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சுனைமல்குகயிலாய
மெடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை. ச-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நம்பனை நகரமூன்று மெரியுணவெருவநோக்கு
மம்பனை யமுதையாற்றை யணிபொழிற்கச்சியுள்ளே
கம்பனைக் கதிர்வெண்டிங்கட் செஞ்சடைக்கடவுடன்னைச்
செம்பொனைப் பவளத்தூணைச் சிந்தியா வெழுகின்றேனே. ௧

ஒருமுழமுள்ள குட்டமொன்பது துளையுடைத்தா
யரைமுழமதனகலமதனில் வாழ் முதலையைந்து
பெருமுழைவாய்தல் பற்றிக் கிடந்து நான் பிதற்றுகின்றேன்
கருமுகிறவழுமாடக் கச்சியேகம்பனீரே. ௨

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். ச-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஓதுவித்தாய் முன்னறவுரைகாட்டி யமணரொடே
காதுவித்தாய் கட்டநோய்பிணிதீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித்தாய் நின்பணிபிழைக்கிற் புளியம்வளாரான்
மோதுவிப்பா யுகப்பாய் முனிவாய் கச்சியேகம்பனே. ௧

குறிக்கொண்டிருந்து செந்தாமரையாயிரம் வைகல்வைக
னெறிப்பட வின்னடைபுனைகின்றமாலை நிறையழிப்பான்
கறைக்கண்டனீ யொருபூக்குறைவித்துக் கண்சூல்விப்பதே
பிறைத்துண்டவார்சடையாய் பெருங்காஞ்சியெம் பிஞ்ஞகனே.

கருவுற்ற நாண்முதலாக வுன்பாதமே காண்பதற்கு
வுருகிற்றெனுள்ளமுநானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்
றிருவொற்றியூரா திருவாலவாயா திருவாரூரா
வொருபற்றிலாமையுங் கண்டிரங்காய் கச்சியேகம்பனே.

பாம்பரைச் சேர்த்திப் படருஞ்சடைமுடிப் பால்வண்ணனே
கூம்பலைச் செய்தகரதலத்தன்பர்கள் கூடிப்பண்டைட்

சாம்பரைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்சரணென்
றேம்பலிப்பாரகட்கிரங்குகண்டாய்கச்சியேகம்பனே. அ

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பண்டுசெய்தபழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலர்ச்செஞ்சடையேகம்பன்
றொண்டனாய்த்திரியாய்துயர்தீரவே. க

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணென்றுபேசற்கரியவன்
வண்ணமில்லிவடிவேறுபவன்
கண்ணிலுண்மணிகச்சியேகம்பனே. அ

இலங்கைவேந்தனிராவணன்சென்றுதன்
விலங்கலையெடுக்கவிரலூன்றலுங்
கலங்கிக்கச்சியேகம்பவோவென்றலு
நலங்கொள்செல்வளித்தானெங்கணாதனே. கக

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பூமேலானும்பூமகள்கேள்வனு
நாயேதேவரெனுமைநடுக்குறத்
தீமேவும்முருவாதிருவேகம்பா
வாமோவல்லற்படவடியோங்களே. க

சிந்தையுட்சிவமாய்நின்றுசெம்மையோ
டந்தியாயனலாய்ப்புனல்வானமாய்ப்
புந்தியாய்ப்புகுந்துள்ளநிறைந்தவெம்
மெந்தையேகம்பமேத்தித்தொழுமினே. ரு

அரக்கன்றன்வலியுன்னிக்கயிலையை
நெருக்கிச்சென்றெடுத்தான்முடிதோணெரித்
திரக்கவின்னிசைகேட்டவனேகம்பந்
தருக்கதாகநாஞ்சார்ந்துதொழுதுமே. கய

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவன்காண்கூற்றுவனைக்குமைத்த கோன்காண் குவலயன்காண்குவலயத்தினீராளுன்காண், காற்றவன்காண் கனலவன்காண்கலிக்குமின்காண்கனபவளச்செம்மேனி கலந்தவெள்ளை, நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்காணி றையார்ந்தபுனற்கங்கைநிமிர்சடைமே,லேற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத் தானே. க

நேசன்காணேசர்க்குநேசந்தன்பாலில்லாதநெஞ்சத்தா நீசர்தம்மைக், கூசன்காண்கூசாதார்நெஞ்சுதஞ்சேகுடிகொண்டருளுமழகன்காணழகார்கொன்றை, வாசன்காண்மலைமங்கைபங்கன்றான்காண் வானவர்களெப்பொழுதும்வணங்கியேத்து, மீசன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன் காணவனென்னெண்ணத்தானே. உ

ஆய்ந்தவன்காணருமறையோடங்கமாறுமணிந்தவன் காணுடரவோடென்புமாமை, காய்ந்தவன்காண்கண்ணழலாற்காமனுகங்கனன்றெழுந்தகாலனுடல்பொடியாய்வீழப், பாய்ந்தவன்காண்பண்டுபலசருகாற்பந்தர்பயின்றநூற் சிலந்திக்குப்பாராள்செல்வ, மீந்தவன்காணெழிலாரும் பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௩

முந்தைகாண்மூவரினுமுதலானான்காண் மூவிலைவேன் மூர்த்திகாண்முருகவேட்குத், தந்தைகாண்டண்கடமாமுகத்தினார்க்குத்தாதைகாண்டாழ்ந்தடியேவணங்குவார்க்குச், சிந்தைகாண்சிந்தாதசித்தத்தார்க்குச் சிவனவன்காண்செங்கண்மால்விடையொன்றேறு, மெந்தைகாணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. ௪

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - தக்கேசி. எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமரர்தொழுதேத்துஞ், சீலந்தான்பெரிதும்முடையானைச்சிந்திப்பாரவர்சிந்தையுளானை, யேலவார்குழலாளுமைநங்கையென்றுமேத்

திவழிபடப்பெற்ற, காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக் கண்ணடியேன்பெற்றவாறே.

திரியுமுப்புரந்தீப்பிழம்பாகச்செங்கண்மால்விடைமேற் றிகழ்வானைக், கரியினீருரிபோர்த்துகந்தானைக்காமனைக்கனலாவிழித்தானை, வரிகொள்வெள்வளையாளுமைநங்கைமருவியேத்திவழிபடப்பெற்ற, பெரியகம்பனையெங்கள்பிரானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. ௬

வெல்லும்வெண்மழு வொன்றுடையானைவேலைநஞ்சுண்டவித்தகன்றன்னை, யல்லறீர்த்தருள்செய்யவல்லானையருமறையவைபங்கம்வல்லானை, யெல்லையில்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற, நல்லகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. ௯

எள்கலின்றியிமையவர்கோனையீசனைவழிபாடுசெய்வாள்போ, லுள்ளத்துள்கியுகந்துமைநங்கைவழிபடச்சென்றுநின்றவாகண்டு, வெள்ளங்காட்டிவெருட்டிடவஞ்சிவெருவியோடித்தழுவவெளிப்பட்ட, கள்ளக்கம்பனையெங்கள்பிரானைக் காணக்கண்ணடியேன்பெற்றவாறே. ௧0

பெற்றமேறுகந்தேறவல்லானைப்பெரியவெம்பெருமானென்றெப்போதுங், கற்றவர்பரவப்படுவானைக்காணக்கண்ணடியேன்பெற்றதென்று, கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக்குளிர்பொழிற்றிருநாவலாரூரனற்றமிழிவையீரைந்தும்வல்லார் நன்னெறியுலகெய்துவர்தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# உ. திருக்கச்சிமேற்றளி.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருநேரிசை. சு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்,

மறையதுபாடிப்பிச்சைக்கென்றகந்திரிந்துவாழ்வார்
பிறையதுசடைமுடிமேற்பெய்வளையாடன்னோடுங்
கறையதுகண்டங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளா
லிறையவர்பாடலாடலிலங்குமேற்றளியனாரே.

மாலனமாயன்றன்னைமகிழ்ந்தனர்விருத்தராகும்
பாலனூர்பசுபதியார்பால்வெள்ளைநீறுபூசிக்
காலனைக்காலாற்செற்றார்காஞ்சிமாநகர்தன்னுள்ளா
லேலுநற்கடம்பன்றாதையிலங்குமேற்றளியனாரே. ௨

செல்வியைப்பாகங்கொண்டார்சேந்தனைமகனாக்கொண்டார்
மல்லிகைக்கண்ணியோடுமாமலர்க்கொன்றைசூடிக்
கல்வியைக்கரையிலாதகாஞ்சிமாநகர்தன்னுள்ளா
லெல்லியைவிளங்கநின்றாரிலங்குமேற்றளியனாரே. ௩

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நொந்தாவொண்சுடரேநுனையேநினைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய்மனமேபுகுந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான்றிருமேற்றளியுறையு
மெந்தாயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே. ௧

ஆட்டான்பட்டமையாலடியார்க்குத்தொண்டுபட்டுக்
கேட்டேன்கேட்பதெல்லாம்பிறவாமைக்கேட்டொழிந்தேன்
சேட்டார்மாளிகைசூழ்திருமேற்றளியுறையு
மாட்டேயுன்னையல்லான்மகிழ்ந்தேத்தமாட்டேனே. ௨

பாரூர்பல்லவனூர்மதிற்காஞ்சிமாநகர்வாய்ச்
சீரூரும்புறவிற்றிருமேற்றளிச்சிவனை
யாரூரனடியானடித்தொண்டனாரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# ௩. திருவோணகாந்தன்றளி.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தல்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைக்கழலடிதொழுதுய்யினல்லா

ஐவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேனுக்
குய்யுமாறொன்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே. க

திங்கடங்குசடைகண்மேலோர்திரைகள்வந்துபுரளவீசுங்
கங்கையாளேல்வாய்திறவாள்கணபதியேல்வயிறுதாரி
யங்கைவேலான்குமரன்பிள்ளைதேவியார்கோற்றட்டியாளா
ருங்களுக்காட்செய்யமாட்டோமோணகாந்தன்றளியுளீரே.

பாரமாகித்திருவடிக்குப்பணிசெய்தொண்டர்பெறுவதென்னே
யாரம்பாம்புவாழ்வதாரூரொற்றியூரேலும்மதன்று
தாரமாகக்கங்கையாளைச்சடையில்வைத்தவடிகேளுந்த
மூருங்காடுவுடையுந்தோலேயோணகாந்தன்றளியுளீரே.

ஓவணமேலெருதொன்றேறுமோணகாந்தன்றளியுளார்தா
மாவணஞ்செய்தாளுங்கொண்டரைதுகிலொடுபட்டுவீக்கிக்
கோவணமேற்கொண்டவேடங்கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்பத்தும்வல்லார்பறையுந்தாஞ்செய்தபாவந்தானே. கப

திருச்சிற்றம்பலம்.

---

# ௰. திருக்கச்சியனேகதங்காவதம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் -இந்தளம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்தி
கழைங்கணையக், கோனையெரித்தெரியாடியிடங்குலவானதி
டங்குறையாமறையா, மானையிடத்ததோர்கையனிடம்மத
மாறுபடப்பொழியும்மலைபோல்,யானையுரித்தபிரானதிடங்க
லிக்கச்சியனேகதங்காவதமே. க

கூறுநடைக்குழிகட்பகுவாயனபேயுகந்தாடநின்றோரி
யிட,வேறுபடக்குடகத்திலையம்பலவாணனின்றாடல்விரும்பு
மிட, மேறுவிடைக்கொடியெம்பெருமானிமையோர்பெரு
மானுமையாள்கணவ, னாறுசடைக்குடையப்பனிடங்கலிக்க
ச்சியனேகதங்காவதமே. உ

வீடுபெறப்பலவூழிகணின்றுநினைக்குமிடம்வினைதீருமி
டம், பீடுபெறப்பெரியோரடைகொண்டுமேவினர்தங்களை
க்காக்குமிடம், பாடுமிடத்தடியான்புகழூரனுரைத்தவிம்மா

லைகள்பத்தும்வல்லார், கூடுமிடஞ்சிவலோகனிடங்கலிக்கச்
சியனேகதங்காவதமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# ௫. திருக்கச்சிநெறிக்காரைக்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பஞ்சமம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வாரணவுமுலைமங்கைபங்கினராயங்கையினிற்
போரணவுமழுவொன்றங்கேந்திவெண்பொடியணிவர்
காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. ௧

காரூருமணிமிடற்றார்கரிகாடருடைதலைகொண்
டேரூரும்பலிக்குழல்வாருழைமானினுரியதளர்
தேரூருநெடுவீதிச்செழுங்கச்சிமாநகர்வாய்
நீரூருமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. ௨

கண்ணாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காடுறையும்
பெண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தித்
தண்ணாரும்பொழிற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௬. திருக்குரங்கணின்முட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-தக்கராகம். ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விழுநீர்மழுவாட்படையண்ணல்விளங்குங்
கழுநீர்குவளைம்மலரக்கயல்பாயுங்
கொழுநீர்வயல்சூழ்ந்தகுரங்கணின்முட்டந்
தொழுநீர்மையர்தீதுறுதுன்பமிலரே. ௧

விடைசேர்கொடியண்ணல்விளங்குயர்மாடக்
கடைசேர்கருமென்குளத்தோங்கியகாட்டிற்

குடையார்புனன்மல்குகுரங்கணின்முட்ட
முடையானெனையாளுடையெந்தபிரானே உ

கல்லார்மதிட்காழிஞானசம்பந்தன்
கொல்லார்மழுவேந்திகுரங்கணின்முட்டஞ்
சொல்லார்தமிழ்மாலைசெவிக்கினிதாக
வல்லார்க்கெளிதாம்பிறவாவகைவீடே கக

திருச்சிற்றம்பலம்.

---

# எ. திருமாகறல்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிராகம். பண்-சாதாரி .ங-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விங்குவிளைகழனிமிகு கடைசியர்கள்பாடல்விளை யாடலரவ, மங்குலொடுநீள்கொடிகண்மாடமலிநீடுபொழின்மாகறலுளான், கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்களணிசெஞ்சடையினான், செங்கண்விடையண்ணலடிசேர்பவர்கடமவினைகடமருமுடனே. க

கலையினொலிமங்கையர்கள்பாடலொலியாடல்கவினெய்தியழகார், மலையினிகர்மாடமுயர்நீள்கொடிகள் வீசுமலிமாகறலுளா, னிலையின்மலிவேலனையசூலம்வலனேந்தியெரிபுன்சடையினா, னிலைகொள்புனலேந்துபெருமானடியையேத்தவினையகலுமிகவே.

கடைகொணெடுமாடமிகவோங்குகமழ்வீதிமலிகாழியவர்கோ, னடையும்வகையாற்பரவியரனையடிகூடுசம்பந்தனுரையான், மடைகொள்புனலோடுவயல்கூடுபொழின்மாகறலுளானடியையே, யுடையதமிழ்பத்துமுணர்வாரவர்கடொல்வினைகளொல்குமுடனே. கக

திருச்சிற்றம்பலம்.

---

# ௮. திருவோத்தூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம். க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பூத்தேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி
யேத்தாதாரில்லையெண்ணுங்கா
லோத்தூர்மேயவொளிமழுவாளங்கை
கூத்தீரும்மகுணங்களே. ௧

இடையீர்போகாவிளமுலையாளையோர்
புடையீரேபுள்ளிமானுரி
யுடையீரேயுமையேத்துமோத்தூர்ச்
சடையீரேயுமதாளே. ௨

தாதார்கொன்றைதயங்குமுடியுடை
நாதாவென்றுநலம்புகழ்ந்
தோதாதாருளரோதிருவோத்தூ
ராதீரேயருணல்குமே. ௭

குரும்பையாண்பனையீன்குலையோத்தூ
ரரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுண்ஞானசம்பந்தன்சொல்
விரும்புவார்வினைவீடே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௯. திருவன்பார்த்தான்பனங் காட்டூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விடையின்மேல்வருவானைவேதத்தின்பொருளானை
யடையிலன்புடையானையாவர்க்குமறியொண்ணா
மடையில்வாளைகள்பாயும்வன்பார்த்தான்பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கைதரித்தானைச்சாராதார்சார்வென்னே. ௧

தண்ணார்மாமதிசூடித்தழல்போலுந்திருமேனிக்
கெண்ணார்நாண்மலர்கொண்டங்கிசைத்தேத்துமடியார்கள்
பண்ணார்பாடலறாதபடிறன்றன்பனங்காட்டூர்ப்
பெண்ணாணயபிரானைப்பேசாதார்பேச்சென்னே. ௯

பாரூரும்பனங்காட்டூர்ப்பவளத்தின்படியானைச்
சீரூருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரன்னடித்தொண்டனடியன்சொல்லடிநாய்சொல்
லாரூரனுரைசெய்வாருயர்வானத்துயர்வாரே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# ௧0. திருவல்லம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத்
தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு
தெரித்தவனுறைவிடந்திருவல்லமே. ௧

தாயவனுலகுக்குத்தன்னொப்பிலாத்
தூயவன்றூமதிசூடியெல்லை
மாயவனமரர்க்குமுனிவர்கட்குஞ்
சேயவனுறைவிடந்திருவல்லமே. ௨

சுற்றவர் திருவல்லங்கண்டுசென்று
நற்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
குற்றமில்செந்தமிழ்கூறவல்லார்
பற்றுவரீசன்பொற்பாதங்களே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

# கக. திருமாற்பேறு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பழந்தக்கராகம். க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஊறியார்தருநஞ்சினையுண்டுமை
நீறுசேர்திருமேனியர்
சேறுசேர்வயற்றென்றிருமாற்பேற்றின்
மாறிலாமணிகண்டரே. க

தொடையார்மாமலர்கொண்டிருபோதுமை
யடைவாராமடிகள்ளென
மடையார்நீர்மல்குமன்னியமாற்பே
றுடையீரேயுமையுள்கியே. ௨

சாலமாமலர்கொண்டுசரணென்று
மேலையார்கள்விரும்புவார்
மாலினார்வழிபாடுசெய்மாற்பேற்று
நீலமார்கண்டனின்னையே. ௩

மன்னிமாலொடுசோமன்பணிசெயு
மன்னுமாற்பேற்றடிகளை
மன்னுகாழியுண்ஞானசம்பந்தன்சொற்
பன்னவேவினைபாறுமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

பண் - வியாழக்குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

குருந்தவன்குருகவன்கூர்மையவன்
பெருந்தகைபெண்ணவனாணுமவன்
கருந்தடமலர்க்கண்ணிகாதல்செய்யு
மருந்தவன்வளநகர்மாற்பேறே. க

பாறணிவெண்டலைகையிலேந்தி
வேறணிபலிகொளும்வேட்கையனாய்
நீறணிந்துமையொருபாகம்வைத்த
மாறிலிவளநகர்மாற்பேறே. ௨

அந்தமின் ஞானசம்பந்தனல்ல
செந்திசைபாடல்செய்மாற்பேற்றைச்
சந்தமின்றமிழ்கள்கொண்டேத்தவல்லா
ரெந்தைதன்கழலடியெய்துவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு நாயனார்.

### திருவிருத்தம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மாணிக்குயிர்பெறக்கூற்றையுதைத்தனமாவலிபாற்
காணிக்கிரந்தவன்காண்டற்கரியனகண்டதொண்டர்
பேணிக்கிடந்துபரவப்படுவனபேர்த்துமஃதே
மாணிக்கமாவனமாற்பேறுடையான்மலரடியே. ௧

கருடத்தனிப்பாகன்காண்டற்கரியனகாதல்செய்யிற்
குருடர்க்குமுன்னேகுடிகொண்டிருப்பனகோலமல்கு
செருடக்கடிமலர்ச்செல்விதன்செங்கமலக்கரத்தால்
வருடச்சிவப்பனமாற்பேறுடையான்மலரடியே. ௨

திருச்சிற்றம்பலம்.

### திருக்குறுந்தொகை. ௫-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொருமாற்றின்படைவேண்டிநற்பூம்புனல்
வருமாற்றின்மலர்கொண்டுவழிபடுங்
கருமாற்கின்னருள்செய்தவன்காண்டகு
திருமாற்பேறுதொழவினைதேயுமே. ௯
கருத்தனைக்கயிலாயமலைதனைத்
தருக்கினாலெடுத்தானைத்தகரவே
வருத்தியாரருள்செய்தவன்மாற்பேறு
வருத்தியாற்றொழுவார்க்கில்லையல்லலே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

### திருக்குறுந்தொகை. ௫-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஏதுமொன்றுமறிவிலராயினு
மோதியஞ்செழுத்துமுணர்வார்கட்குப்

போதமின்றியவரவருள்ளத்தே
மாதுந்தாமுமகிழ்வர்மாற்பேறரே. க

சாத்திரம்பலபேசுஞ்சழக்கர்காள்
கோத்திரமுங்குலமுங்கொண்டென்செய்வீர்
பாத்திரஞ்சிவமென்றுபணிதிரேல்
மாத்திரைக்குளருளுமாற்பேறரே. ரு

ஈட்டுமாநிதிசாலவிழக்கினும்
வீட்டுங்காலன்விரையவழைக்கினுங்
காட்டின்மாநடமாடுவாய்காவெனில்
வாட்டந்தீர்க்கவும்வல்லர்மாற்பேறரே. சு

உந்திச்சென்றுமலையையெடுத்தவன்
சந்துதோளொடுதாளிறவூன்றினன்
மந்திபாய்பொழில்சூழுமாற்பேறனை
வந்தியில்லதோரின்பமணுகுமே. க0

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். கூ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பாரானைப்பாரினதுபயனானானைப் படைப்பாகிப்பல்லுயிர்க்கும்பரிவோன்றன்னை, யாராதவின்னமுதையடியார்தங்கட்கானத்தானைக்குமரனையமரர்கோனைக், காரானைக்கண்டனைக் கயிலைவேந்தைக்கருதுவார்மனத்தானைக்காலர்செற்ற, சீரானைச்செல்வனைத் திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனானே. க

மலைமகடங்கோனவனைமாநீர்முத்தைமரகதத்தை மாமணியைமல்குசெல்வக், கலைநிலவுங்கையானைக்கம்பன்றன்னைக் காண்பினியசெழுஞ்சுடரைக் கனகக்குன்றை, விலைபெரிய வெண்ணீற்றுமேனியானைமெய்யடியார்வேண்டியதே வேண்டுவானைச், சிலைநிலவுகரத்தானைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனானே. ரு

நீறாகிநீறுமிழுநெருப்புமாகிநினைவாகிநினைவினியமலையான்மங்கை, கூறாகிக்கூற்றாகிக்கோளுமாகிக் குணமாகிக் குறையாதவுவகைக்கண்ணீ,ராறாதவானந்தத்தடியார்செய்த

வனாசாரம்பொறாத்தருணியவர்மேலென்றுஞ், சீறுதபெரு
மானைத்திருமாற்பேற்றெஞ்செம்பவளக்குன்றினைச்சென்றடை
ந்தேனானே. ரு

திருச்சிற்றம்பலம்.

---

## கஉ. திருவூறல்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

**பண் - வியாழக்குறிஞ்சி. க-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

மாறிலவுணரரணமவைமாயவோர்வெங்கணையாலன்று
நீறெழவெய்தவெங்கணிமலனிடமன்னவிற்
றேறலிநம்பொழிலூர்திகழ்செங்கயல்பாய்வயலுஞ்சூழ்ந்த
வூறலமர்ந்தபிரானொலியார்கழலுள்குதுமே. க

மத்தமதக்கரியைமலையான்மகளஞ்சவன்றுகையான்
மெத்தவுரித்தவெங்கள்விமலன்விரும்புமிடந்
தொத்தலரும்பொழில்சூழ்வயல்சேர்ந்தொளிநீலநாளுநயன
மொத்தலருங்கழனித்திருவூறலையுள்குதுமே. உ

கோடலிரும்புறவிற்கொடிமாடக்கொச்சையர்மன்பெச்ச
வோடுபுனல்சடைமேற்கரந்தான்றிருவூற
லைநாடலரும்புகழான்மிகுஞானசம்பந்தன்சொன்னநல்ல
பாடல்கள்பத்தும்வல்லார்பரலோகத்திருப்பாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## கங. திருஇலம்பையங்கோட்டூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

**பண் - குறிஞ்சி. க-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

மலையினார்பருப்பதந்துருத்திமாற்பேறுமாசிலாச்சீர்ம
றைக்காடுநெய்த்தான, நிலையினானெனதுரைதனதுரையாகநீ
றணிந்தேறுகந்தேறியநிமலன், கலையினார்மடப்பிணைதுணை
யொடுந்துயிலக்கானலம்பெடைபுல்கிக்கணமயிலாலு, மிலையி
னார்பைம்பொழிலிலம்பையங்கோட்டூ ரிருக்கையாப்பேணி
யென்னெழில்கொள்வதியல்பே. க

திருமலர்க்கொன்றையானின்றியூர் மேயான்றேவர்கட
லைமகன்றிருக்கழிப்பாலை,நிருபமனெனதுறைதனதுறையாக
நீறணிந்தேறுகந்தேறியநிமலன், கருமலர்க்கமழ்சுனைநீண்ம
லர்க்குவளைகதிர்முலையிளையவர்மதிமுகத்துலவு, மிருமலர்த்
தண்பொய்கையிலம்பையங்கோட்டூரிருக்கையாப் பேணியெ
ன்னெழிகொள்வதியல்பே.

கந்தனைமலிகனைகடலொலியோதங்கானலங்கழிவளர் க
ழுமலமென்னு, நந்தியாருறைபதிநான்மறைநாவனற்றமிழ்க்
கின்றுணைஞானசம்பந்த, னெந்தையார்வளநகரிலம்பையங்
கோட்டூரிசையொடுகூடியபத்தும்வல்லார்போய், வெந்துயர்
கெடுகிடவிண்ணவரோடும்வீடுபேறின்மையின்வீடெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## கச. திருவிற்கோலம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரபஞ்சமம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

உருவினாருமையொடுமொன்றிநின்றதோர்
திருவினான்வளர்சடைத்திங்கள்கங்கையான்
வெருவிவானவர்தொழவெகுண்டுநோக்கிய
செருவினானுறைவிடந்திருவிற்கோலமே. ௧

சிற்றிடையுமையொருபங்கனங்கையி
லுற்றதோரெரியினனொருசரத்தினால்
வெற்றிகொளவுணர்கள்புரங்கள்வெந்தறச்
செற்றவனுறைவிடந்திருவிற்கோலமே. ௨

கோடல்வெண்பிறையனைக்கூகமேவிய
சேடனைச்செழுமதிற்றிருவிற்கோலத்தை
நாடவல்லலந்தமிழ்ஞானசம்பந்தன்
பாடல்வல்லார்களுக்கில்லைபாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௫. திருவாலங்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-தக்கராகம். ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௧

கேடும்பிறவியுமாக்கினாருங்கேடிலா
வீடுமாநெறிவிளம்பினாரெம்விகிர்தனார்
காடுஞ்சுடலையுங்கைக்கொண்டெல்லிற்கணப்பேயோ
டாடும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௨

சாந்தங்கமழ்மறுகிற்சண்பைஞானசம்பந்த
னந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை
வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே. ௧௨

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருநேரிசை. ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளநீர்ச்சடையர்போலும்விரும்புவார்க்கெளியர்போலு
முள்ளுளேயுருகிநின்றங்குகப்பவர்க்கன்பர்போலுங்
கள்ளமேவினைகளெல்லாங்கரிசறுத்திடுவர்போலு
மள்ளலம்பழனைமேயவாலங்காட்டடிகளாரே. ௧

கூடினாருமைதன்னோடேகுறிப்புடைவேடங்கொண்டு
சூடினார்கங்கையாளைச்சுவறிடுசடையர்போலும்
பாடினார்சாமவேதம்பைம்பொழிற்பழனைமேயா
ராடினார்காளிகாணவாலங்காட்டடிகளாரே. ௮

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம். சு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றாவுலகனைத்துமானார்தாமேயூழிதோறூழியுயர்ந்தார்தாமே, நின்றாகியெங்குநிமிர்ந்தார்தாமேநீர்வளிதீயாகாசமானார்தாமே, கொன்றாடுங்கூற்றையுதைத்தார்தாமேகோலப்பழனையுடையார்தாமே, சென்றாடுதீர்த்தங்களானார்தாமேதிருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. க

மலைமகளைப்பாகமமர்ந்தார்தாமேவானோர்வணங்கப்படுவார்தாமே, சலமகளைச்செஞ்சடைமேல்வைத்தார்தாமேசரணென்றிருப்பார்கட்கன்பர்தாமே, பலபலவும்வேடங்களானார்தாமேபழனைபதியாவுடையார்தாமே,சிலைமலையூரூமெயிலுமட்டார்தாமேதிருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. உ

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - பழம்பஞ்சுரம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முத்தாமுத்தித்ரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா
சித்தாசித்தித்திறங்காட்டுஞ்சிவனேதேவர்சிங்கமே
பத்தாபத்தர்பலர்போற்றும்பரமாபழையனூர்மேய
வத்தாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே

பொய்யேசெய்துபுறம்புறமேதிரிவேன்றன்னைப்போகாமே
மெய்யேவந்திங்கெனையாண்டமெய்யாமெய்யர்மெய்ப்பொரு [ளே
பையாடரவமரைக்கசைத்தபரமாபழையனூர்மேய
வையாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. உ

பத்தர்சித்தர்பலரேத்தும்பரமன்பழையனூர்மேய
வத்தனாலங்காடன்றனடிமைத்திறமேயன்பாகி
சித்தர்சித்தம்வைத்தபுகழ்ச்சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார்பரமனடியேபணிவாரே. க0

திருச்சிற்றம்பலம்.

# கரு. திருப்பாசூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - காந்தாரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சிந்தையிடையார் தலையின்மிசையார் செஞ்சொல்லார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்
மைந்தாமணாளாவென்னமகிழ்வாரூர்போலும்
பைந்தண்மாதவிசோலைசூழ்ந்தபாசூரே. க

பேரும்பொழுதும்பெயரும்பொழுதும்பெம்மானென்
றாருந்தனையுமடியாரேத்தவருள்செய்வா
ரூருமரவுமுடையார்வாழுமூர்போலும்
பாரின்மிசையார்பாடலோவாப்பாசூரே. உ

ஞானமுணர்வான்காழிஞானசம்பந்தன்
றேனும்வண்டுமின்னிசைபாடுந்திருப்பாசூர்க்
கானமுறைவார்கழல்சேர்பாடலிவைவல்லா
ரூனமிலராயும்பர்வானத்துறைவாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முந்திமூவெயிலெய்தமுதல்வனார்
சிந்திப்பார்வினைதீர்த்திடுஞ்செல்வனா
ரந்திக்கோன்றனக்கேயருள்செய்தவர்
பந்திச்செஞ்சடைப்பாசூரடிகளே. க

மடந்தைபாகமகிழ்ந்தமணாளனார்
தொடர்ந்தவல்வினைபோக்கிடுஞ்சோதியார்
கடந்தகாலனைக்கால்கொடுபாய்ந்தவர்
படர்ந்தநாகத்தர்பாசூரடிகளே. உ

திரியுமூவெயில்செங்கணையொன்றினா
லெரியவெய்தனரேனுமிலங்கைக்கோ

னெரியலூன் றியிட்டார்விரலொன் றினால்
பரியர்நுண்ணியர்பாசூரடிகளே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். ௬௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விண்ணாகிநிலனாகிவிசும்புமாகிவேலைசூழ்ஞாலத்தார்விரும்புகின்ற, வெண்ணாகியெழுத்தாகியியல்புமாகியேழுலகுந்தொழுதேத்திக்காணநின்ற, கண்ணாகிமணியாகிக்காட்சியாகிக்காதலித்தங்கடியார்கள்பரவநின்ற, பண்ணாகியின்னமுதாம்பாசூர்மேயபரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே.

வேடனாய்விசயன்றன்வியப்பைக்காண்பான்விற்பிடித்துக்கொம்புடையவேனத்தின்பின், கூடினாருமையவளுங்கோலங்கொள்வக்கொலைப்பகழியுடன்கோத்துக்கோரப்பூசலாடினார்பெருங்கூத்துக்காளிகாணவருமறையோடாறங்கமாய்ந்துகொண்டுபாடினார்நால்வேதம்பாசூர்மேயபரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே. (௫)

புத்தியினாற்சிலந்தியுந்தன்வாயினூலாற்பொதுப்பந்தலதிழைத்துச்சருகான்மேய்ந்த, சித்தியினாலரசாண்டுசிறப்புச்செய்யச்சிவகணத்துப்புகப்பெய்தார்திறலான்மிக்க, வித்தகத்தால்வெள்ளானைவெள்ளாவன்புவிரவியவா கண்டதற்குவீடுகாட்டிப், பத்தர்களுக்கின்னமுதாப்பாசூர்மேயபரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே. ௬

ஞாலத்தையுண்டதிருமாலுமற்றைநான்முகனுமறியாதநெறியான்கையிற், சூலத்தாலந்தகனைச்சூலத்திற்கோத்துத்தொல்லுலகிற்பல்லுயிரைக்கொல்லுங்கூற்றைக், காலத்தாலுதைசெய்துகாதல்செய்தவந்தணனைக்கைக்கொண்டசெல்வர்வல்லார், பாலொத்தவெண்ணீற்றர்பாசூர்மேயபரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே. ௭

திருச்சிற்றம்பலம்.

# ௧௭. திருவெண்பாக்கம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பிழையுளனபொறுத்திடுவரென்றடியேன்பிழைத்தக்காற்
ப்பழியதனைப்பாராதேபடலமென்கண்மறைப்பித்தாய்
குழைவிரவுவடிகாதாகோயிலுளாயேயென்ன
வுழையுடையானுள்ளிருந்துவுளோம்போகீரென்றானே. ௧

பொன்னவிலுங்கொன்றையினாய்போய்மகிழ்க்கீழிருவென்
சொன்னவெனைக்காணாமேசூளுறவுமகிழ்க்கீழே ௫
யென்னவல்லபெருமானேயிங்கிருந்தாயோவென்ன
வொன்னலரைக்கண்டாற்போலுளோம்போகீரென்றானே.

மான்றிகழுஞ்சங்கிலியைத்தந்துவருபயன்களெல்லாந்
தோன்றவருள்செய்தளித்தாயென்றுரைக்கவுலகமெல்லா
மீன்றவனேவெண்கோயிலிங்கிருந்தாயோவென்ன
வூன்றுவதோர்கோலருளியுளோம்போகீரென்றானே. ௯

ஏராரும்பொழினிலவுவெண்பாக்கமிடங்கொண்ட
காராருமிடற்றானைக்காதலித்திட்டன்பினொடுஞ்
சீராருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரன்றமிழ்வல்லார்க்கடையாவல்வினைதானே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௮. திருக்கள்ளில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி. ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

முள்ளின்மேன்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூறைக்கொடிவிளைந்த
கள்ளின்மேயவண்ணல்கழல்கணாளு
முள்ளுமேலுயர்வெய்தலொருதலையே. ௧

ஆடலான்பாடலானரவங்கள்பூண்டா
னோடலாற்கலனில்லானுறைபதியாற்

காடலாற்கருதாதகள்ளின்மேயான்
பாடெலாம்பெரியார்கள்பரசுவாரே. ௰

திகைநான்கும்புகழ்காழிச்செல்வமல்கு
பகல்போலும்பேரொளியான்பந்தனல்ல
முகைமேவுமுதிர்சடையான்கள்ளிலேத்த
புகழோடும்பேரின்பம்புகுதுமன்றே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௩. திருக்காளத்தி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சந்தமாரகிலொடுசாதிதேக்கம்மர
முந்துமாமுகலியின்கரையினிலுமையொடு
மந்தமார்பொழில்வளர்மல்குவண்காளத்தி
யெந்தையாரிணையடியென்மனத்துள்ளவே. ௧

ஆலமாரரவமோடமைந்தசீர்ச்சந்தனஞ்
சாலமாபீலியுஞ்சண்பகமுந்தியே
காலமார்முகலிவந்தணைதருகாளத்தி
நீலமார்கண்டனைநினையுமாநினைவதே. ௨

அட்டமாசித்திகளணைதருகாளத்தி
வட்டவார்சடையனைவயலணிகாழியான்
சிட்டநான்மறைவலஞானசம்பந்தன்சொ
லிட்டமாப்பாடுவார்க்கில்லையாம்பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

திருவிராகம். பண் - சாதாரி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வானவர்கடானவர்கள்வாதைபடவந்ததொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவில்
லேனமிளமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினாற்
கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகாளத்திமலையே. ௧

வேயனையதோளுமையொர்பாகமதுவாகவிடையேறிசடைமேற்
றூயமதிசூடிசுடுகாடினடமாடிமலைதன்னைவினவில்
வாய்கலசமாகவழிபாடுசெய்யும்வேடன்மலராகுநயனங்
காய்கணையினாலிடந்தீசனடிகூடுகாளத்திமலையே. ௪

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையைப்
பாடமொடுமாளிகைகணீடுவளர்கொச்சைவயமன்னுதலைவ
னாடுமலிநீடுபுகழ்ஞானசம்பந்தனுரைநல்லதமிழின் ௧௧
பாடலொடுபாடுமிசைவல்லவர்கணல்லர்பரலோகமெளிதே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விற்றூணொன்றில்லாதநல்கூர்ந்தான்காண்வியன்கச்சிக்
கம்பன்காண்பிச்சையல்லான், மற்றூணொன்றில்லாதமாசது
ரன்காண்மயானத்துமைந்தன்காண்மாசொன்றில்லாப், பொ
ற்றூண்காண்மாமணிநற்குன்றொப்பான்காண்பொய்யாதுபொ
ழிலேழுந்தாங்கிநின்ற, கற்றூண்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே. ௧

நாரணன்காணான்முகன்காணால்வேதன்காண்ஞானப்
பெருங்கடற்கோர்நாவாயன்ன, பூரணன்காண்புண்ணியன்
காண்புராணன்றான்காண்புரிசடைமேற்புனலேற்றபுனிதன்
றான்காண், சாரணன்காண்சந்திரன்காண்கதிரோன்றான்கா
ண்டன்மைக்கட்டானேகாண்டக்கோர்க்கெல்லாங், காரண
ன்காண்காளத்திகாணப்பட்டகணநாதன்காணவனென்கண்
ணுளானே. ௩

மனத்தகத்தான்றலைமேலான்வாக்கினுள்ளான் வாயார
த்தன்னடியேபாடுந்தொண்ட, ரினத்தகத்தானிமையவர்தஞ்
சிரத்தின்மேலானேழண்டத்தப்பாலானிப்பாற்செம்பொற்,
புனத்தகத்தா னறுங்கொன்றைப்போதினுள்ளான்பொருப்
பிடையானெருப்பிடையான்காற்றினுள்ளான், கனத்தகத்
தான் கயிலாயத்துச்சியுள்ளான்காளத்தியானவனென் கண்
ணுளானே. ௫

தேனப்பூவண்டுண்டகொன்றையான்காண்டிருவேகம்
பத்தான்காண்டேனார்ந்துக்க, ஞானப்பூங்கோதையாள்பா
கத்தான்காணம்பன்காண்ஞானத்தொளியானான்காண், வா
னப்பேராறுமறியவோடியட்டித்தாநின்றான்காண் வண்டார்
சோலைக், கானப்பேரூரான்காண் கறைக்கண்டன்காண் கா
ளத்தியானவனென்கண்ணுளானே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் நட்டராகம். எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே
வண்டாருங்குழலாளுமைபாகமகிழ்ந்தவனே
கண்டார்காதலிக்குங்கணநாதனெங்காளத்தியா
யண்டாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. ௧

இமையோர்நாயகனேயிறைவாவென்னிடர்த்துணையே
சமையார்கருணையினாய்கருமாமுகில்போன்மிடற்றா
யுமையோர்கூறுடையாயுருவேதிருக்காளத்தியு
ளமைவேயுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. ௨

காரூரும்பொழில்சூழ்கணநாதனெங்காளத்தியு
ளாராவின்னமுதையணிநாவலாரூரன்சொன்ன
சீரூர்செந்தமிழ்கள்செப்புவார்வினையாயினபோய்ப்
பேராவின்னுலகம்பெறுவார்பிழைப்பொன்றிலரே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# ௨0. திருவொற்றியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண்-பஞ்சமம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விடையவன்விண்ணுமண்ணுந்தொழநின்றவன்வெண்மழுவாட்
படையவன்பாய்புலித்தோலுடைகோவணம்பல்கரந்தைச்
சடையவன்சாமவேதன்சசிதங்கியசங்கவெண்டோ
டுடையவனூனமில்லியுறையும்மிடமொற்றியூரே. ௧

பாரிடப்பாணிசெய்யப்பறைக்கட்செறுபல்கணப்பேய்
சீரொடும்பாடலாடலிலயஞ்சிதையாதகொள்கைத்
தாரிடும்போர்விடையன்றலைவன்றலையேகலனு
வூரிடும்பிச்சைகொள்வானுறையுமிடமொற்றியூரே. உ

ஒண்பிறைமல்குசென்னியிறைவனுறையொற்றியூரைச்
சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்பத்தும்பரவிப்பணிந்தேத்தவல்லார்
விண்புனைமேலுலகம்விருப்பெய்துவர்வீடெளிதே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருநேரிசை. ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளத்தைச்சடையுள்வைத்தவேதகீதன்றன்பாத
மெள்ளத்தானடையவேண்டின்மெய்தருஞானத்தீயாற்
கள்ளத்தைக்கழியநின்றார்க்காயத்துக்கலந்துநின்று
வுள்ளத்துளொளியுமாகுமொற்றியூருடையகோவே. க

சமையமேலாறுமாகித்தானொருசயம்புவாகி
யிமையவர்பரவியேத்தவினிதினங்கிருந்தவீசன்
கமையினையுடையராகிக்கழலடிபரவுவார்க்
குமையொருபாகர்போலுமொற்றியூருடையகோவே. ரு

திருச்சிற்றம்பலம்.

---

### திருநேரிசை. ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஒம்பினேன்கூட்டைவாளாவுள்ளத்தோர்கொடுமைவைத்துக்
காம்பிலாமூழைபோலக்கருதிற்றேமுகக்கமாட்டேன்
பாம்பின்வாய்த்தேரைபோலப்பலபலநினைக்கின்றேனை
யோம்பிநீயுய்யக்கொள்ளாயொற்றியூருடையகோவே. க

மனமெனுந்தோணிபற்றிமதியெனுங்கோலையூன்றிச்
சினமெனுஞ்சரக்கையேற்றிச்செறிகடலோடும்போது
மதனெனும்பாறைதாக்கிமறியும்போதறியவொண்ணா
துனையுனுமுணர்வைநல்காயொற்றியூருடையகோவே. உ

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம். சுஃ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

செற்றுக்களிற்றுரிகொள்கின்றஞான்றுசெறுவெண்கொம் [பொன்
றிற்றுக்கிடந்ததுபோலுமிளம்பிறைபாம்பதனைச்
சுற்றிக்கிடந்ததுகிம்புரிபோலச்சுடரிமைக்கு
நெற்றிக்கண்மற்றதன்முத்தொக்குமாலொற்றியூரனுக்கே. க

வேலைக்கடனஞ்சமுண்டுவெள்ளேற்றொடும்வீற்றிருந்த
மாலைச்சடையார்க்குறைவிடமாவதுவாரிகுன்று
வாலைக்கரும்பொடுசெந்நெற்கழனியருகணைந்த
சோலைத்திருவொற்றியூரையெப்போதுந்தொழுமின்களே.

இன்றரைக்கண்ணுடையாரெங்குமில்லையிமையமெனுங்
குன்றரைக்கண்ணன்குலமகட்பாவைக்குக்கூறிட்டநா
ளன்றரைக்கண்ணுங்கொடுத்துமையாளையும்பாகம்வைத்த
ஒன்றரைக்கண்ணன்கண்டீரொற்றியூருறையுத்தமனே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றியூருமொளிமதிபாம்பினை
யுற்றியூருமப்பாம்புமதனையே
யொற்றியூரவொருசடைவைத்தவ
னொற்றியூர்தொழநம்வினையோயுமே. க

கூற்றுத்தண்டத்தையஞ்சிக்குறிக்கொண்மி
னூற்றுத்தண்டத்தடக்குமரனடி
நீற்றுத்தண்டத்தராய்நினைவார்க்கெலா
மூற்றுத்தண்டொப்பர்போலொற்றியூரரே. உ

வரையினாருயர்தோளுடைமன்னனை
வரையினால்வலிசெற்றவர்வாழ்விடந்
திரையினார்புடைசூழ்திருவொற்றியூ
ருரையினாற்பொலிந்தாருயர்ந்தார்களே. கய

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வண்டோங்குசெங்கமலக்கழுநீர்மல்குமாதவத்தன்செஞ்சடைமேன்மதியஞ்சூடித், திண்டோள்களாயிரமும்வீசிநின்றுதிசைசேரநடமாடிச்சிவலோகனா, ருண்டார்நஞ்சுலகுக்கோருறுதிவேண்டியொற்றியூர்மேயவொளிவண்ணனார், கண்டேன்கனவகத்திற்கண்டேற்கென்றன்கடும்பிணியுஞ்சுடுதொழிலுங்கைவிட்டவே. க

கடியவிடையேறிக்காளகண்டர்கலையோடுமழுவாளோர்கையிலேந்தி, யிடியபலிகொள்ளாப்போவாரல்லரெல்லாந்தானிவ்வடிகள்யாரென்பாரே, வடிவுடையமங்கையுந்தாமுமெல்லாம்வருவாரையெதிர்கண்டோமயிலாப்புள்ளே, செடிபடுவெண்டலையொன்றேந்திவந்து திருவொற்றியூர்புக்கார்தீயவாறே. ௪

மண்ணல்லைவிண்ணல்லைவலையமல்லைமலையல்லைகடலல்லைவாயுவல்லை, யெண்ணல்லையெழுத்தல்லையெரியுமல்லையிரவல்லைபகலல்லையாவுமல்லை, பெண்ணல்லையாணல்லைபேடுமல்லைபிறிதல்லையானாயும்பெரியாய்நீயே, யுண்ணல்லைநல்லார்க்குத்தீயையல்லையுணர்வரியவொற்றியூருடையகோவே. ௬

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - தக்கேசி. ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அழுக்குமெய்கொடுன்றிருவடியடைந்தேனதுவுநான்படப்பாலதொன்றானாற், பிழுக்கைவாரியும்பால்கொள்வரடிகேள்பிழைப்பனாகிலுந்திருவடிப்பிழையேன், வழுக்கிவீழினுந்திருப்பெயரல்லான்மற்றுநானறியேன்மறுமாற்ற, மொழுக்கவென்கணுக்கொருமருந்துரையாயொற்றியூரெனுமூருறைவானே. க

கட்டனேன்பிறந்தேனுனக்காளாய்க்காதற்சங்கிலிகாரணமாக, வெட்டெனைப்புகழுந்திருமூர்த்தியென்செய்வானடியேனெடுத்துரைக்கேன், பெட்டனாகிலுந்திருவடிப்பிழையேன்பிழைப்பனாகிலுந்திருவடிக்கடிமை, யொட்டினேனென்னைநீசெய்வதெல்லாமொற்றியூரெனுமூருறைவானே. ௨

மகத்திற்புக்கதோர்சனியெனக்கானாய்மைந்தனே மணி
யேமணவாளா, வகத்திற்பெண்டுகணானொன்றுசொன்னா
லழையேற்போகுருடாவெனத்தரியேன். முகத்திற்கண்ணிழந்
தெங்ஙனம்வாழ்கேன்முக்கணாமுறையோமறையோதீ, யுகை
க்குந்தண்கடலோதம்வந்துலவுமொற்றியூரெனுமூருறைவா
னே. ௯

ஓதம்வந்துலவுங்கரைதன்மேலொற்றியூருறைசெல்வனை
நாளும், ஞாலந்தான்பரவப்படுகின்றநான்மறையங்கமோதிய
நாவன், சீலந்தான்பெரிதும்மிகவல்லசிறுவன்வன்றொண்ட
னூரனுரைத்த, பாடல்பத்திவைவல்லவர்தாம்போய்ப்பரகதி
திண்ணநண்ணுவர்தாமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

பண் - குறிஞ்சி. ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பாட்டும்பாடிப்பரவித்திரிவா
ரீட்டும்வினைகடீர்ப்பார்கோயில்
காட்டுங்கலமுந்திமிலுங்கரைக்கே
யோட்டுந்திரைவாயொற்றியூரே. ௧

பந்துங்கிளியும்பயிலும்பாவை
சிந்தைகவர்வார்செந்தீவண்ண
ரெந்தம்மடிகளிறைவர்க்கிடம்போ
லுந்துந்திரைவாயொற்றியூரே. ௨

பவளக்கனிவாய்ப்பாவைபங்கன்
கவளக்களிற்றினுரிவைபோர்த்தா
றவழுமதிசேர்சடையாற்கிடம்போ
லுகளுந்திரைவாயொற்றியூரே. ௩

ஒற்றியூருமரவும்பிறையும்
பற்றியூரும்பவளச்சடையா
னொற்றியூர்மேலூரனுரைத்த
கற்றுப்பாடக்கழியும்வினையே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# உக. திருவலிதாயம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பத்தரோடுபலரும்பொலியம்மலரங்கைப்புனல்தூவி
யொத்தசொல்லியுலகத்தவர்தாந்தொழுதேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெருமான்பிரியாதுறைகின்றவலிதாயஞ்
சித்தம்வைத்தவடியாரவர்மேலடையாமற்றிடர்நோயே.

படையிலங்குகரமெட்டுடையான்படிறாகக்கனலேந்திக்
கடையிலங்குமனையிற்பலிகொண்டுணுங்கள்வன்னுறைகோயின்
மடையிலங்குபொழிலின்னிழல்வாய்மதுவீசும்வலிதாய
மடைபயின்றவடியார்க்கடையாவினையல்லற்றுயர்தானே.

வண்டுவைகும்மணமல்கியசோலைவளரும்வலிதாயத்
தண்டவாணனடியுள்குதலாலருமாலைத்தமிழாகக்
கண்டல்வைகுகடற்காழியுண்ஞானசம்பந்தன்றமிழ்பத்துங்
கொண்டுவைகியிசைபாடவல்லார்குளிர்வானத்துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

# உஉ. திருமுல்லைவாயில்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி. எ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

திருவுமெய்ப்பொருளுஞ்செல்வமுமெனக்குன்சீருடைக் கழல்களென்றெண்ணி, யொருவரைமதியாதுறாமைகள்செய் தூமுடியுமுறைப்பணித்திரிவேன், முருகமர்சோலைசூழ்திரு முல்லைவாயிலாய்வாயினுலுன்னைப், பரவிடுமடியேன்படுதுயர் களையாய்பாசுபதாபரஞ்சுடரே. க

விண்பணிந்தேத்தும்வேதியர்மாதர்வெருவிடவேழமொ ன்றுரித்தாய், செண்பகச்சோலைசூழ்திருமுல்லைவாயிலாய்தே வர்தம்மரசே, தண்பொழிலொற்றிமாநகருடையாய்சங்கிலிக் காவென்கண்கொண்ட, பண்பநின்னடியேன்படுதுயர்களை யாய்பாசுபதாபரஞ்சுடரே. உ

நம்பனேயன்றுவெண்ணெய்நல்லூரினாயினேன்றன்னையாட்கொண்ட, சம்புவேயும்பரார்தொழுதேத்துந்தடங்கடனஞ்சுண்டகண்ட, செம்பொன்மாளிகைசூழ்திருமுல்லைவாயிற்றேடியான்றிரிதர்வேன்கண்ட, பைம்பொனேயடியேன்படுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே. ௮

சொல்லரும்புகழான்றொண்டைமான்களிற்றைச்சூழ்கொடிமுல்லையாற்கட்டிட், டெல்லையிலின்பமவன்பெறவெளிப்பட்டருளியவிறைவனேயென்று, நல்லவர்பரவுந்திருமுல்லைவாயிறாதனேநரைவிடையேறி, பல்கலைப்பொருளேபடுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே. ௧௦

விரைதருமலர்மேலயனொடுமாலும்வெருவிடநீண்டவெம்மானைத், திரைதருபுனல்சூழ்திருமுல்லைவாயிற்செல்வனைநாவலாரூர, னுரைதருமாலையோரைந்துமைந்துமுள்குளிர்ந்தேத்தவல்லார்க, ணரைதிரைமூப்புநடலையுமின்றிநண்ணுவர்விண்ணவர்க்கரசே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௩. திருவேற்காடு

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பழந்தக்கராகம். ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஒள்ளிதுள்ளக்கதிக்காமிவனொளி
வெள்ளியானுறைவேற்காடு
டுள்ளியாருயர்ந்தாரிவ்வுலகினிற்
றெள்ளியாரவர்தேவரே. ௧

ஆடனாகமசைத்தளவில்லதோர்
வேடங்கொண்டவன்வேற்காடு
பாடியும்பணிந்தாரிவ்வுலகினிற்
சேடராகியசெல்வரே. ௨

பூதம்பாடப்புறங்காட்டிடையாடி
வேதவித்தகன்வேற்காடு
போதுஞ்சாந்தும்புகையுங்கொடுத்தவர்க்
கேதமெய்துதலில்லையே. ௩

விண்டமாம்பொழில்சூழ்தருவேற்காடு
கண்டுநம்பன்கழல்பேணிச்
சண்பைஞானசம்பந்தனசெந்தமிழ்
கொண்டுபாடக்குணமாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௪. திருமயிலாப்பூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-சீகாமரம். ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னொட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய். ௧

மைப்பயந்தவொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பயந்தநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னைப்பசியோணவிழாவுமருந்தவர்க
டுய்ப்பனவுங்காணாதேபோதியோபூம்பாவாய். ௨

உரிஞ்சாயவாழ்க்கையமணுடையைப்போர்க்கு
மிருஞ்சாக்கியர்களெடுத்துரைப்பநாட்டிற்
கருஞ்சோலைசூழ்ந்தகபாலீச்சரத்தான்றன்
பெருஞ்சாந்திகாணாதேபோதியோபூம்பாவாய். ௰

கானமர்சோலைக்கபாலீச்சரமமர்ந்தான்
றேனமர்பூம்பாவைப்பாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தனலம்புகழ்ந்தபத்தும்வல்லார்
வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௫. திருவான்மியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெள்ளிப்பிவன்
றிரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூ

ருரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர்
வரையுலாமடமாதுடனாகியமாண்பதே. க

சந்துயர்ந்தெழுகாரகிறண்புனல்கொண்டுதஞ்
சிந்தைசெய்தடியார்பரவுந்திருவான்மியூர்ச்
சுந்தரக்கழன்மேற்சிலம்பார்க்கவல்லீர்சொலீ
ரந்தியின்னொளியின்னிறமாக்கியவண்ணமே. உ

மாதொர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூ
ராதியெம்பெருமானருள்செய்யவினவுரை
யோதியன்றெழுகாழியுண்ஞானசம்பந்தன்சொன்
னீதியானினைவார்நெடுவானுலகாள்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

பண் - கௌசிகம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விரையார்கொன்றையினாய்விடமுண்டமிடற்றினனே
யுரையார்பல்புகழாயுமைநங்கையோர்பங்குடையாய்
திரையார்தெண்கடல்சூழ்திருவான்மியூருறையும்
மரையாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. க

இடியாரேறுடையாயிமையோர்தம்மணிமுடியாய்
கொடியார்மாமதியோடரவம்மலர்க்கொன்றையினாய்
செடியார்மாதவிசூழ்திருவான்மியூருறையும்
மடிகேளுன்னையல்லாலடையாதெனதாதரவே உ

கன்றுருங்கமுகின்வயல்சூழ்தருகாழிதனி
னன்றுனபுகழான்மிகுஞானசம்பந்தனுரை
சென்றார்தம்மிடர்தீர்திருவான்மியூரதன்மேற்
குன்றாதேத்தவல்லார்கொடுவல்வினைபோயறுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

விண்டமாமலர்கொண்டுவிரைந்துநீ
ரண்டர்நாயகன்றன்னடிசூழ்மின்கள்
பண்டுநீர்செய்தபாவம்பறைந்திடும்
வண்டுசேர்பொழில்வான்மியூரீசனே. க

ஆதியும்மரனுமயன் மாலுமாய்ப்
பாதிபெண்ணுருவாயபரமனென்
றோதியுள்குழைந்தேத்தவல்லாரவர்
வாதைதீர்த்திடும்வான்மியூரீசனே. ௮

ஒட்டைமாடத்திலொன்பதுவாசலுங்
காட்டில்வேவதன்முன்னங்கழலடி
நாட்டிநாண்மலர்தூவிவலஞ்செயின்
வாட்டந்தீர்த்திடும்வான்மியூரீசனே. ௯

பாரமாகமலையெடுத்தான்றனைச்
சீரமாகத்திருவிரலூன்றிய
ஞார்வமாகவழைத்தவனேத்தலும்
வாரமாயினன்வான்மியூரீசனே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

# ௨௯. திருக்கச்சூராலக்கோயில்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-கொல்லிக்கௌவாணம். ௭-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

முதுவாயோரிகதறமுதுகாட்டெரிகொண்டாடல் முயல்வானே, மதுவார்கொன்றைப்புதுவீசூடுமலையான்மகடன் மணவாளா, கதுவாய்த்தலையிற்பலிநீகொள்ளக்கண்டாலடியார்கவலாரே, யதுவேயாமாறிதோகச்சூராலக்கோயிலம்மானே. ௧

கச்சேரரவொன்றரையிலசைத்துத்தழலுஞ்சிலப்புங்கலிக்கப்பலிக்கென், றச்சம்போதவூர்திரியக்கண்டாலடியாருருகாரே, யிச்சையறியோமெங்கள்பெருமானேழேழ்பிறப்புமெனையாள்வா, யச்சமில்லாக்கச்சூர்வடபாலாலக்கோயிலம்மானே. ௨

பொய்யேயுன்னைப்புகழ்வார்புகழ்ந்தாலதுவும் பொருளக்கொள்வானே, மெய்யேயெங்கள்பெருமானுன்னைநினைவாரவரைநினைகண்டாய், மையார்தடங்கண்மடந்தைபங்காமதியஞ்சடைவைத்த, வையாசெய்யாய்வெளியாய்கச்சூராலக்கோயிலம்மானே. ௩

அன்னமன்னும்வயல்சூழ்தரு ஆலக்கோயிலெம்மானை யுன்னமுன்னுமனத்தாரூரனாரூரன்பேர்முடிவைத்த, மன்னு புலவன்வயனாவலர்கோன்செஞ்சொல் நாவன் வன்றொண் டன், பன்னுதமிழ்நூல்மாலைவல்லாரவரெந்தலைமேற்பயில் வாரே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# உ௭. திருஇடைச்சுரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வரிவளரவிரொளியரவரைதாழவார்சடைமுடிமிசைவ ளர்மதிசூடிக், கரிவளர்தருகழல்கால்வலனேந்திக்கனலெரி யாடுவர்காடரங்காக, விரிவளர்தருபொழிலிளமயிலாலவெண் ணிறத்தருவிகடிண்ணெனவீழ, எரிவளரினமணிபுனமணி சுரமிடைச்சுரமேவியவிவர்வணமென்னே. ௧

ஆற்றையுமேற்றதோரவிர்சடையுடையரழகினையருளு வர்குழகலதறியார், கூற்றுயிர்செகுப்பதோர்கொடுமையை யுடையர்நடுவிருளாடுவர்கொன்றையந்தாரார், சேற்றயல்மி ளிர்வனகயலிளவாளைசெருச்செயவோர்ப்பனசெம்முகமந்தி, பேற்றையொடுமிதருமெழிறிகழ்சாரலிடைச்சுரமேவியவிவர் வணமென்னே. ௨

மடைச்சுரமறிவனவாளையுங்கயலுமருவியவயறனில்வரு புனற்காழி, சடைச்சுரத்துறைவதோர்பிறையுடையண்ணல் சரிதைகள்பரவிநின்றுருகுசம்பந்தன், புடைச்சுரத்தருவரைப்பூக்கமழ்சாரற்புணர்மடநடையவர்புடையிடையார்ந்த, இ டைச்சுரமேத்திய விசையொடுபாடலிவைசொலவல்லவர் பி ணியிலர்தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

# உஅ. திருக்கழுக்குன்றம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையானொருகாதிற்றூயகுழைதாழ
ஏடுடையான்றலைகலனாகவிரந்துண்ணு
நாடுடையானள்ளிருளேயாநடமாடுங்
காடுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. க

கேணவல்லான்கேழல்வெண்கொம்புகுறளாமை
பூணவல்லான்புரிசடைமேலோர்புனல்கொன்றை
பேணவல்லான்பெண்மகடன்னையொருபாகங்
காணவல்லான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. உ

கண்ணுதலான்காதல்செய்கோயில்கழுக்குன்றை
நண்ணியசீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பண்ணியல்பாற்பாடியபத்துமிவைவல்லார்
புண்ணியராய்விண்ணவரோடும்புகுவாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருத்தாண்டகம். சு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மூவிலைவேற்கையானைமூர்த்திதன்னை முதுபிணக்காடுடையானைமுதலானானை, யாவினிலைந்துகந்தானையமரர்கோனை யாலமுண்டுகந்தவையன்றன்னைப், பூவினின்மேனான்முகனுமாலும்போற்றப்புணர்வரியபெருமானைப்புனிதன்றன்னைக், காவலனைக்கழுக்குன்றமமர்ந்தான்றன்னைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. க

பல்லோடுதலைசடைமேலுடையான்றன்னைப் பாய்புலித்தோலுடையானைப்பகவன்றன்னைச், சொல்லோடுபொருளனைத்துமானான்றன்னைச் சுடருருவிலென்பறாக்கோலத்தானை, யல்லாதகாலனைமுன்னடர்த்தான்றன்னை யாலின்கீழிருந்தானையமுதானானைக், கல்லாடைபுனைந்தருளுங்காபாலியைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. க0

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கொன்றுசெய்தகொடுமையாற்பலசொல்லவே
நின்றபாவவினைகடாம்பலநீங்கவே
சென்றுசென்றுதொழுமின்றேவர்பிரானிடங்
கன்றினோடுபிடிசூழ்தண் கழுக்குன்றமே. ௧

இறங்கிச்சென்றுதொழுமினின்னிசைபாடவே
பிறங்குகொன்றைச்சடையனெங்கள்பிரானிடம்
நிறங்கள்செய்தமணிகணித்திலங்கொண்டிழி
கறங்குவெள்ளையருவித்தண்கழுக்குன்றமே. ௨

பல்லில்வெள்ளைத்தலையன்றான்பயிலும்மிடங்
கல்லில்வெள்ளையருவித்தண்கழுக்குன்றினை
மல்லின்மல்குதிரடோளூரன்வனப்பினாற்
சொல்லல்சொல்லித்தொழுவாரைத்தொழுமின்களே.

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௬. அச்சிறுபாக்கம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்- குறிஞ்சி ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொன்றிரண்டன்னபுரிசடைபுரளப்பொருகடற்பவள
மொடழனிறம்புரையக், குன்றிரண்டன்னதோளுடையகலங்
குலாயவெண்ணூலொடுகொழும்பொடியணிவர், மின்றிரண்
டன்னநுண்ணிடையரிவை மெல்லியலாளையோர் பாகமாப்
பேணி, யன்றிரண்டுருவமாயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்
சிகொண்டாரே. ௧

தேனினுமினியர்பாலனநீற்றர் தீங்கரும்பனையர் தந்திரு
வடிதொழுவா, ரூனயந்துருகவுவகைகடருவாருச்சிமேலு
றைபவரொன்றலாதூரார், வானகமிறந்துவையகம்வணங்க
வயங்கொளநிற்பதோர்வடிவினையுடையா, ரானையினுரிவை
போர்த்தவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. ௨

மைச்செறிகுவளைதவளைவாய்நிறைய மதுமலர்ப்பொய்
கையிற்புதுமலர்கிழியப், பச்சிறவெறிவயல்வெறிகமழ்காழிப்
பதியவரதிபதிகவுணியர்பெருமான், கைச்சிறுமறியவன்கழலலா
ற்பேணாக்கருத்துடைஞானசம்பந்தன தமிழ்கொண், டுச்
சிறுபாக்கத்தடிகளையேத்துமன்புடையடியவரருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

## ௩௰. திருவக்கரை.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பியந்தைக்காந்தாரம். ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கறையணிமாமிடற்றான்கரிகாடரங்காவுடையான்
பிறையணிகொன்றையினானொருபாகமும்பெண்ணமர்ந்தான்
மறையவனன்றலையிற்பலிகொள்பவன்வக்கரையி
லுறைபவனெங்கள்பிரானொலியார்கழலுள்குதுமே. ௧

பாய்ந்தவன்காலனைமுன்பணைத்தோளியோர்பாகமதா
வேய்ந்தவனெண்ணிறந்தவிமையோர்கடொழுதிறைஞ்ச
வாய்ந்தவன்முப்புரங்களெரிசெய்தவன்வக்கரையிற்
றேய்ந்திளவெண்பிறைசேர்சடையானடிசெப்புதுமே. ௨

தண்புனலும்மரவுஞ்சடைமேலுடையான்பிறைதோய்
வண்பொழில்சூழ்ந்தழகாரிறைவன்னுறைவக்கரையைச்
சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

## ௩௧. திருஅரசிலி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-பியந்தைக்காந்தாரம். ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பாடல்வண்டறைகொன்றைபான்மதிபாய்புனற்கங்கை
கோடல்கூவிளமாலைமத்தமுஞ்செஞ்சடைக்குவாவி
வாடல்வெண்டலைமாலையருவிடவல்லியந்தோண்மே
லாடன்மாசுணமசைத்தவடிகளுக்கிடமரசிலியே. ௧

ஏறுபேணியதேறிளமதக்களிற்றினையெற்றி
வேறுசெய்ததனுரிவைவெண்புலால்கலக்கமெய்போர்த்த
ஆறுதேனவனும்பர்க்கொருவனல்லொளிகொளொண்சுடரா
மாறுசேர்த்தருசென்னியடிகளுக்கிடமரைசிலியே. ௨

அல்லிநீள்வயல்சூழ்ந்தவரைசிலியடிகளைக்காழி
நல்லஞானசம்பந்தனற்றமிழ்பத்திவைநாளுஞ்
சொல்லவல்லவர்தம்மைச்சூழ்ந்தமரர்தொழுதேத்த
வல்லவானுலகெய்திவைகலுமகிழ்ந்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

# ௩௨. திருஇரும்பைமாகாளம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-செவ்வழி. ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மண்டுகங்கைசடையிற்கரந்தும்மதிசூடிமான்
கொண்டகையாற்புரமூன்றெரித்தகுழகன்னிட
மெண்டிசையும்புகழ்போய்விளங்குமிரும்பைதனுள்
வண்டுகீதம்முரல்பொழில்சுலாய்நின்றமாகாளமே. ௧

வேதவித்தாய்வெள்ளைநீறுபூசிவினையாயின
கோதுவித்தாய்நீறெழக்கொடிமாமதிலாயின
வேதவித்தாயினதீர்க்குமிடமிரும்பைதனுண்
மாதவத்தோர்மறையோர்தொழநின்றமாகாளமே. ௨

எந்தையெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுண்
மந்தமாயபொழில்சூழ்ந்தழகாருமாகாளத்தி
லந்தமில்லாவனலாடுவானையணிஞானசம்
பந்தன்சொன்னதமிழ்பாடவல்லார்பழிபோகுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

துளுவநாடு.

# க. திருக்கோகர்ணம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-சாதாரி. ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

என்றுமரியானயலவர்க்கியலிசைப்பொருள்களாகியெனதா
ணன்றுமொளியாவொளிசிறந்தபொன்முடிக்கடவுணண்ணுமிடமா
மொன்றியமனத்தடியர்கூடியிமையோர்பரவுநீடரவமார்
குன்றுகணெருங்கிவிரிதண்டலைமிடைந்துவளர்கோகர்ணமே

பேதைமடமங்கையொருபங்கிடமிகுத்திடவமேறியமரர்
வாதைபடவண்கடலெழுந்தவிடமுண்டசிவன்வாழுமிடமா
மாதரொடுமாடவர்கள்வந்தடியிறைஞ்சிநிறைமாமலர்கடேய்க்
கோதைவரிவண்டிசைகொள்கீதமுரல்கின்றவளர்கோகர்ணமே.

கோடலரவீனும்விரிசாரன்முனெருங்கிவளர்கோகர்ணமே
யீடமினிதாகவுறைவானடிகள்பேணியணிகாழிநகரா
ஞடியதமிழ்க்கிளவியின்னிசைசெய்ஞானசம்பந்தன்மொழிகள்
பாடவலபத்தரவரெத்திசையுமாள்வர்பரலோகமெளிதே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருத்தாண்டகம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சந்திரனுந்தண்புனலுஞ்சந்தித்தான்காண்டாழ்சடை யான்காண்சார்ந்தார்க்கமுதானான்கா, ணந்தரத்திலசுரர்புர மூன்றட்டான்காணவ்வுருவிலவ்வுருவமாயினான்காண், பந்த ரத்துநான்மறைகள்பாடினான்காண்பலபலவும்பாணி பயில்கி ன்றான்காண், மந்திரத்துமறைப்பொருளுமாயினான்காண்மா கடல்சூழ்கோகரணமன்னினானே. ௧

திருச்சிற்றம்பலம்.

---

வட நாடு.

# க. திருப்பருப்பதம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தா
னிடுமணியெழிலானையேறலனொருபேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப்
படுமணிவிடுசுடரார்பருப்பதம்பரவுதுமே. க

நோய்புல்குதோறிரையநரைவருநுகருடம்பி
னீபுல்குதோற்றமெல்லாநினையுங்குமடநெஞ்சே
வாய்புல்குதோத்திரத்தால்வலஞ்செய்துதலைவணங்கிப்
பாய்புலித்தோலுடையான்பருப்பதம்பரவுதுமே. உ

வெண்செநெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான்
பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நன்சொலினாற்பரவுஞானசம்பந்தனல்ல
வொண்சொலினிவைமாலையுருவெணத்தவமாமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருநேரிசை. சு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

கன்றினார்புரங்கள்மூன்றுங்கனலெரியாகச்சீறி
நின்றதோருருவந்தன்னைநீர்மையுநிறையுங்கொண்
டொன்றியாங்குமைபுந்தாமுமூர்பலிதேர்ந்துபின்னும்
பன்றிப்பின்வேடராகிப்பருப்பதநோக்கினாரே. க

அங்கண்மாலுடையராயவைவராலாட்டுணாதே
யுங்கண்மாறீரவேண்டிலுள்ளத்தாலுள்கியேத்துஞ்
செங்கண்மால்பரவியேத்திச்சிவனெனநின்றசெல்வர்
பைங்கண்வெள்ளேறதேறிப்பருப்பதநோக்கினாரே. அ

திருச்சிற்றம்பலம்.

---

### சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. ஏ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

மானுமரையினமும்மயிலினமுங்கலந்தெங்குந்
தாமேமிகமேய்ந்தடஞ்சுனைநீர்களைப்பருகிப்
பூமாமரமுரிஞ்சிப்பொழிலூடேசென்றுபுக்குத்
தேமாம்பொழினீழற்றுயில்சீபர்ப்பதமலையே. ௧

மலைச்சாரலும்பொழிற்சாரலும்புறமேவருமினங்கண்
மலைப்பாற்கொணர்ந்திடித்தூட்டிடமலங்கித்தனகளிற்றை
யழைத்தோடியும்பிளிறீயவையலமந்துவந்தெய்த்துத்
திகைத்தோடித்தன்பிடிதேடிடுஞ்சீபர்ப்பதமலையே. ௨

நல்லாரவர்பலர்வாழ்தருவயனாவலவூரன்
செல்லலுறவரியசிவன்சீபர்ப்பதமலையை
யல்லலவைதீரச்சொன்னதமிழ்மாலைகள்வல்லா
ரொல்லைச்செலவுயர்வானகமாண்டங்கிருப்பாரே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## ௨. திருஇந்திரநீலப்பருப்பதம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-இந்தளம். ௨-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

குலவுபாரிடம்போற்றவீற்றிருந்
திலகுமான்மழுவேந்துமங்கையர்
நிலவுமிந்திரநீலபர்ப்பதத்
துலவினானடியுள்கநல்குமே. ௧

குறைவிலார்மதிசூடியாடல்வண்
டறையுமாமலர்க்கொன்றைசென்னிசே
ரிறைவனிந்திரநீலபர்ப்பதத்
துறைவினான்றனையோதியுய்ம்மினே. ௨

கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியர்
னிந்திரன்றொழுநீலபர்ப்பதத்
தந்தமில்சீரையேத்துஞானசம்
பந்தன்பாடல்கொண்டோதிவாழ்மினே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௩. திருவனேகதங்காவதம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நீடன்மேவுநிமிர்புன்சடைமேலொர்நிலாமுளை
சூடன்மேவுமறையின்முறையாலொர்சுலாவழ
லாடன்மேவுமவர்மேயவனேகதங்காவதம்
பாடன்மேவுமனத்தார்வினைபற்றறுப்பார்களே. ௧

சூலமுண்டுமழுவுண்டவர்தொல்படைசூழ்கட
லாலமுண்டபெருமான்றனேகதங்காவத
நீலமுண்டதடங்கண்ணுமைபாகநிலாயதோர்
கோலமுண்டளவில்லைகுலாவியகொள்கையே. ௨

தொல்லையூழிப்பெயர்தோன்றியதோணிபுரத்திறை
நல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்மு
னல்லறீரவுரைசெய்தவனேகதங்காவதஞ்
சொல்லநல்லவடையும்மடையாசுடுதுன்பமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## ௪. திருக்கேதாரம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - செவ்வழி. உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரஞ்சுங்களிறுமடக்கிச்சுரும்பார்மல
ரிண்டைகட்டிவழிபாடுசெய்யுமிடமென்பரால்
வண்டுபாடமயிலாலமான்கன்றுதுள்ளவ்வரி
கெண்டைபாயச்சுனைநீலமொட்டலருங்கேதாரமே. ௧

பாதம்விண்ணோர்பலரும்பரவிப்பணிந்தேத்தவே
வேதநான்கும்பதினெட்டொடாறும்விரித்தார்க்கிடந்
தாதுவிண்டம்மதுவுண்டுமிண்டிவ்வருவண்டினங்
கீதம்பாடம்மடமந்திகேட்டுகளுங்கேதாரமே. ௰

வாய்ந்தசெந்நெல்விளைகழனிமல்கும்வயற்காழியா
னேய்ந்தநீர்க்கோட்டிமையோருறைகின்றகேதாரத்தை
யாய்ந்துசொன்னவருந்தமிழ்கள்பத்தும்மிசைவல்லவர்
வேந்தராகியுலகாண்டுவீடுகதிபெறுவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வாழ்வாவதுமாயம்மிதுமண்ணாவதுதிண்ணம்
பாழ்போவதுபிறவிக்கடல்பசிநோய்செய்தபறிதான்
றாழாதறஞ்செய்மின்றடங்கண்ணான்மலரோனுங்
கீழ்மேலுறநின்றான்றிருக்கேதாரமெனீரே. ௧

பறியேசுமந்துழல்வீர்பறிநரிகீறுவதறியீர்
குறிகூவியகூற்றங்கொளுநாளாலறமுளவே
யறிவானிலுமறிவானலநறுநீரொடுசோறு
கிறிபேசிநின்றிடுவார்தொழுகேதாரமெனீரே. ௨

உழக்கேயுண்டுபடைத்தீட்டிவைத்திழப்பார்களுஞ்சிலர்கள்
வழக்கேயெனிற்பிழைக்கேமென்பர்மதிமாந்தியமாந்தர்
சழக்கேபறிநிறைப்பாரொடுதவமாவதுசெயன்மின்
கிழக்கேசலமிடுவார்தொழுகேதாரமெனீரே. ௩

நாவின்மிசையரையன்னொடுதமிழ்ஞானசம்பந்தன்
யாவர்சிவனடியார்களுக்கடியானடித்தொண்டன்
றேவன்றிருக்கேதாரத்தையூரன்னுரைசெய்த
பாவின்றமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

# ௵. திருநொடித்தான்மலை.

## (ஸ்ரீகைலாயம்.)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி. க-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொடிகொளுருவர்புலியினதளர்புரிநூல்திகழ்மார்பிற்
கடிகொள்கொன்றைகலந்தநீற்றர்கறைசேர்கண்டத்த
ரிடியகுரலாலிரியுமடங்கலுடங்குமுழைச்சாரற்
கடியவிடைமேற்கொடியொன்றுடையார்கயிலைமலையாரே. க

புரிகொள்சடையரடியர்க்கெளியார்கிளிசேர்மொழிமங்கை
தெரியவுருவில்வைத்துகந்ததேவர்பெருமானார்
பரியகளிற்றையரவுவிழுங்கிமழுங்கவிருள்கூர்ந்த
கரியமிடற்றர்செய்யமேனிக்கயிலைமலையாரே. உ

போரார்கடலிற்புனல்சூழ்காழிப்புகழார்சம்பந்தன்
காரார்மேகங்குடிகொள்சாரற்கயிலைமலையார்மேற்
றேராதுரைத்தசெஞ்சொன்மாலைசெப்புமடியார்மேல்
வாராபிணிகள்வானோருலகில்மருவுமனத்தாரே. கக

திருச்சிற்றம்பலம்.

---

### திருநாவுக்கரசுநாயனார்.

போற்றித்திருத்தாண்டகம். சு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றிமீளாமேயாளென்னைக்கொண்டாய்போற்றி, யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றியோவாதசத்தத்தொலியேபோற்றி, யாற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றியாறங்கநால்வேதமானாய்போற்றி, காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றிகயிலைமலையானே போற்றி போற்றி. க

பண்ணினிசையாகிநின்றாய்போற்றிபாவிப்பார்பாவமறுப்பாய்போற்றி, யெண்ணுமெழுத்துஞ்சொல்லானாய்போற்றியென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி, விண்ணுநிலனுந்தீயானாய்போற்றிமேலவர்க்குமேலாகிநின்றாய்போற்றி, கண்

ணின்மணியாகி நின்றாய்போற்றிகயிலைமலையானே போற்றி போற்றி. ௭

உண்ணாதுறங்கா திருந்தாய்போற்றியோதாதேவேதமுணர்ந்தாய்போற்றி, யெண்ணாவிலங்கைக்கோன்றன்னைப்போற்றியிறைவிரலால்வைத்துகந்தாவீசாபோற்றி, பண்ணாரிசையின்சொற்கேட்டாய்போற்றிபண்டேயென்சிந்தைபுகுந்தாய்போற்றி, கண்ணாயுலகுக்குநின்றாய்போற்றிகயிலைமலையானே போற்றிபோற்றி. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண்-பஞ்சமம். ௭-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே
நானெனபாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்து
வானெனைவந்தெதிர்கொள்ளமத்தயானையருள்புரிந்து
வூனுயிர்வேறுசெய்தானொடித்தான்மலையுத்தமனே. ௧

ஆனையுரித்தபகையடியேனொடுமீளக்கொல்லோ
வூனையுயிர்வெருட்டியொள்ளியானைநினைந்திருந்தேன்
வானைமதித்தமரர்வலஞ்செய்தெனையேறவைக்க
வானையருள்புரிந்தானொடித்தான்மலையுத்தமனே. ௨

மந்திரமொன்றறியேன்மனைவாழ்க்கைமகிழ்ந்தடியேன்
சுந்தரவேடங்களாற்றுரிசேசெயுந்தொண்டனெனை
யந்தரமால்விசும்பிலழகானையருள்புரிந்த
துந்தரமோநெஞ்சமேநொடித்தான்மலையுத்தமனே. ௩

இந்திரன்மால்பிரமனெழிலார்மிகுதேவரெல்லாம்
வந்தெதிர்கொள்ளவென்னைமத்தயானையருள்புரிந்து
மந்திரமாமுனிவரிவனாரெனவெம்பெருமா
னந்தமரூரனென்றானொடித்தான்மலையுத்தமனே. ௪

ஊழிதோறூழிமுற்றுமுயர்பொன்னொடித்தான்மலையைச்
சூழிசையின்கரும்பின்சுவைநாவலவூரன்சொன்ன

வேழிசையின்றமிழாலிசைந்தேத்தியபத்திவையு
மாழிகடலரையாவஞ்சையப்பர்க்கறிவிப்பதே. ௧0

வடநாட்டுத் தலங்கள் ஐந்தும் முற்றின.

திருச்சிற்றம்பலம்.

# பொதுப்பதிகங்கள்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருநீலகண்டம்.

பண்-வியாழக்குறிஞ்சி ௧-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீ
ருய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதுநாமடியோஞ்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம் ௧

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தா
லேவினையாலெயின்மூன்றெரித்தீரென்றிருபொழுதும்
பூவினைக்கொய்துமலரடிபோற்றுதுநாமடியோந்
தீவினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம் ௨

முலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம்
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீ
ரிலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ௩

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும்
புண்ணியரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமையாதனமூன்றுடையீருங்கழலடைந்தோந்
திண்ணியதீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ௪

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவா
னிறந்தபிறவியுண்டாகிலிமையவர்கோனடிக்கட்
டிறம்பயில்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## கோளறு திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம். உ-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணை
தடவி,மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்
தவதனால், ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளி
சனிபாம்பிரண்டுமுடனே, யாசறுநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. க

என்பொடுகொம்பொடாமையிவைமார்பிலங்கவெரு
தேறியேழையுடனே, பொன்பொதிமத்தமாலைபுனல்சூடிவந்
தெனுளமேபுகுந்தவதனா, லொன்பதொடொன்றொடேழுப
தினெட்டொடாறுமுடனாயநாள்களவைதா, மன்பொடுநல்ல
நல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. உ

தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நெறுன்னிவளர்
செம்பொனெங்குந்திகழ, நான்முகனாதியாயபிரமாபுரத்தும
றைஞானஞானமுனிவன், றானுறுகோளுநாளுமடியாரைவந்
துநலியாதவண்ணமுரைசெ, யானசொன்மாலையோதுமடியா
ர்கள்வானிலரசாள்வராணைநமதே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## பஞ்சாக்கரத் திருப்பதிகம்.

### பண் - காந்தாரபஞ்சமம். ங-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சலுந்துஞ்சலிலாதபோழ்தினு
நெஞ்சகநைந்துநினைமினாடொறும்
வஞ்சகமற்றடிவாழ்த்தவந்தகூற்
றஞ்சவுதைத்தனவஞ்செழுத்துமே. க

மந்திரநான்மறையாகிவானவர்
சிந்தையுணின்றவர்தம்மையாள்வன
செந்தழலோம்பியசெம்மைவேதியர்க்
கந்தியுண்மந்திரமஞ்செழுத்துமே. உ

புத்தர்சமண்கழுக்கையர்பொய்கொளாச்
சித்தத்தவர்கடெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்
கத்திரமாவனவஞ்செழுத்துமே. க0

நற்றமிழ்ஞானசம்பந்தனுன் மறை
கற்றவன்காழியர்மன்னனுன்னிய
வற்றமின்மாலையீரைந்துமஞ்செழுத்
துற்றனவல்லவரும்பராவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## நமச்சிவாயத்திருப்பதிகம்.

### பண் - கௌசிகம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
யோதுவார்தமைநன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது
நாதனுமநமச்சிவாயவே. ௧

நம்புவார்அவர்நாவினவிற்றினால்
வம்புநாண்மலர்வார்மதுவொப்பது
செம்பொனார்திலகம்முலகுக்கெலா
நம்பனுமநமச்சிவாயவே. ௨

நரகமேழ்புகநாடினராயினு
முரைசெய்வாயினராயினுருத்திரர்
விரவியேபுகுவித்திடுமென்பரால்
வீரனுமநமச்சிவாயவே. ௭

நந்திநாமநமச்சிவாயவெனுஞ்
சந்தையாற்றமிழ்ஞானசம்பந்தன்சொற்
சிந்தையான்மகிழ்ந்தேத்தவல்லாரெல்லாம்
பந்தபாசமறுக்கவல்லார்களே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாசுரம்.

### பண் - கௌசிகம். ௩-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
வாழ்கதீயதெல்லாமரனுமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே ௧

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார். ௯

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
வெல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களும்மதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. ௧௨

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

## திரு அங்கமாலை.

பண் - சாதாரி. ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தலையேநீவணங்காய்-தலை
மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்
தலையேநீவணங்காய். ௧

கண்காள்காண்மின்களோ-கட
னஞ்சுண்டகண்டன்றன்னை
யெண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக்
கண்காள்காண்மின்களோ. ௨

செவிகாள்கேண்மின்களோ-சிவ
னெம்மிறைசெம்பவள
வெரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ்
செவிகாள்கேண்மின்களோ. ௩

மூக்கேநீமுரலாய்-முது
காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை
மூக்கேநீமுரலாய். ௪

வாயேவாழ்த்துகண்டாய்-மத
யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை
வாயேவாழ்த்துகண்டாய். ௫

நெஞ்சேநீநினையாய்-நிமிர்
புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை
நெஞ்சேநீநினையாய். ௬

கைகாள்கூப்பித்தொழீர்-கடி
மாலர்தூவிநின்று
பைவாய்பாம்பரையார்த்தபரமனைக்
கைகாள்கூப்பித்தொழீர். ௭

ஆக்கையாற்பயனென்-னரன்
கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ்
வாக்கையாற்பயனென். ௮

கால்களாற்பயனென்-கறைக்
கண்டனுறைகோயிற்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக்
கால்களாற்பயனென். ௯

உற்றாராருளரோ-வுயிர்
கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக்
குற்றாராருளரோ. ௧௦

இறுமாந்திருப்பன்கொலோ-வீசன்
பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங்
கிறுமாந்திருப்பன்கொலோ. ௧௧

தேடிக்கண்டுகொண்டேன்-றிரு
மாலொடுநான்முகனுந்
தேடித்தேடொணாத்தேவனையென்னுளே
தேடிக்கண்டுகொண்டேன். ௧௨

திருச்சிற்றம்பலம்.

---

## நமச்சிவாயத்திருப்பதிகம்.

**பண் - காந்தாரபஞ்சமம். ௪-ந் திருமுறை.**

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணைத்திருந்தடிபொருந்தக்கைதொழக்

கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாச்சினு
நற்றுணையாவதுநமச்சிவாயவே. ௧

பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை
யாவினுக்கருங்கலமரனஞ்சாடுதல்
கோவினுக்கருங்கலங்கோட்டமில்லது
நாவினுக்கருங்கலநமச்சிவாயவே. ௨

இல்லகவிளக்கதிருள்கெடுப்பது
சொல்லகவிளக்கதுசோதியுள்ளது
பல்லகவிளக்கதுபலருங்காண்பது
நல்லகவிளக்கதுநமச்சிவாயவே. ௮

மாப்பிணைதழுவியமாதொர்பாகத்தன்
பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழ
நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## பாவநாசத்திருப்பதிகம்.

பண் - பழம்பஞ்சுரம். ௬-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பற்றற்றார்சேர்பழம்பதியைப்பாசூர்நிலாயபவளத்தைச்
சிற்றம்பலத்தெந்திகழ்கனியைத்தீண்டற்கரியதிருவுருவை
வெற்றியூரில்விரிசுடரைவிமலர்கோனைத்திரைசூழ்ந்த
வொற்றியூரெமுத்தமனையுள்ளத்துள்ளேவைத்தேனே. ௧

ஆனைக்காவிலணங்கினையாரூர்நிலாயவம்மானைக்
கானப்பேரூர்க்கட்டியைக்கானூர்முளைத்தகரும்பினை
வானப்பேரார்வந்தேத்தும்வாய்மூர்வாழும்வலம்புரியை
மாணிக்கயிலைமழகளிற்றைமதியைச்சுடரைமறவேனே. ௨

புத்தூருறையும்புனிதனைப்பூவணத்தெம்போரேற்றை
வித்தாய்மிழலைமுளைத்தானைவேள்விக்குடியெம்வேதியனை
பொய்த்தார்புரமூன்றெரித்தானைப்பொதியின்மேயபுராணனை
வைத்தேனென்றன்மனத்துள்ளேமாத்தூர்மேயமருந்தையே.

முந்தித்தானேமுளைத்தானையூரிவெள்ளேறூர்ந்தானை
யந்திச்செவ்வான்படியானையரக்கனாற்றலழித்தானைச்

சிந்தைவெள்ளப்புனலாட்டிச்செஞ்சொன்மாலையடிசேர்த்தி
யெந்தைபெம்மானென்னெம்மானென்பார்பாவநாசமே.௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## விடந்தீர்த்ததிருப்பதிகம்.

பண் - இந்தளம். ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொலாமவர்சிந்தையுயர்வரை
யொன்றுகொலாமுயரும்மதிசூடுவ
ரொன்றுகொலாமிடுவெண்டலைகையது
வொன்றுகொலாமவரூர்வதுதானே. ௧

இரண்டுகொலாமிமையோர்தொழுபாத
மிரண்டுகொலாமிலங்குங்குழைபெண்ணு
ணிரண்டுகொலாமுருவஞ்சிறுமான்மழு
விரண்டுகொலாமவரெய்தினர்தாமே. ௨

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயிறுங்நெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடியார்செய்கைதானே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

தனித்திருநேரிசை. ௪-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

உடம்பெனுமனையகத்துவுள்ளமேதகளியாக
மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி
யிடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கிற்
கடம்பமர்காளைதாதைகழலடிகாணலாமே. ௪

அங்கத்தைமண்ணுக்காக்கியார்வத்தையுனக்கேதந்து
பங்கத்தைப்போகமாற்றிப்பாவித்தேன்பரமாநின்னைச்
சங்கொத்தமேனிச்செல்வாசாதனாயேனுன்னை
யெங்குற்றாயென்றபோதாலிங்குற்றேனென்கண்டாயே. ௮

---

மெய்ம்மையாமுழுமைசெய்துவிருப்பெனும்வித்தைவித்திப்
பொய்ம்மையாங்களையைவாங்கிப்பொறையெனுநீரைப்பாய்ச்சித்

தம்மையுநோக்கிக்கண்டுதகவெனும்வேலியிட்டுச்
செம்மையுணிற்பராகிற்சிவகதிவிளையுமன்றே. ௨

காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக
வாய்மையேதூய்மையாகமனமணியிலிங்கமாக
நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டி
பூசனையீசனார்க்குப்போற்றவிக்காட்டினோமே. ௪

---

கடும்பகனட்டமாடிக்கையிலோர்கபாலமேந்தி
யிடும்பலிக்கில்லந்தோறுமுழிதருமிறைவனீரே
நெடும்பொறைமலையர்பாவைநேரிழைநெறிமென்கூந்தற்
கொடுங்குழைபுகுந்தவன்றுங்கோவணமரையதேயோ. ௧

விளக்கினார்பெற்றவின்பமெழுகினாற்பதிற்றியாகுந்
துளக்கினன்மலர்தொடுத்தாற்றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார்பேறுசொல்லின்மெய்ஞ்ஞெறிஞானமாகும்
மளப்பிலகீதஞ்சொன்னார்க்கடிகடாமருளுமாறே. ௫

திருச்சிற்றம்பலம்.

---

## குறைந்த திருநேரிசை.

வென்றிலேன்புலன்களைந்தும்வென்றவர்விளாகந்தன்னுட்
சென்றிலேனாதலாலேசெந்நெறியதற்குஞ்சேயே
னின்றுளேதளும்புகின்றேனீசனேனீசனேயோ
வின்றுளேனாளையில்லேனென்செய்வான்றோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்.

---

## ஆருயிர்த்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாந்திசைக்குமிருதிசைக்குமிறைவாமுறையென்
றிட்டாரமரர்வெம்பூசலெனக்கேட்டெரிவிழியா
வொட்டாக்கயவர்திரிபுரமூன்றையுமோரம்பினா
லட்டானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. ௧

தரியாவெகுளியனாய்த்தக்கன்வேள்விதகர்த்துகந்த
வெரியாரிலங்கியசூலத்தினானிமையாதமுக்கட்
பெரியான்பெரியார்பிறப்பறுப்பானென்றுந்தன்பிறப்பை
யரியானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. ௫

னல்லார்மற் றவர்செய்கை யன்பாலே நயந்ததனை
யல்லூர்தார் கல்லென்புரா ரரனூர்க்கல் தலராமால் ௬௫

சேரமான்பெருமாணயனார் புராணம்.

வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்த மணித்தூபந்
தேசிற் பெருகுஞ் செழுந்தீப முதலா யினவுந் திருவமுது
மீசற் கேற்ற பரிசினா லருச்சித் தருள வெந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர்பொற்பார் சிலம்பி னொலியளித்தார்.

கூற்றுவநாயனார் புராணம்.

தேனுங் குழலும் பிழைக்கதிரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார்தூது தருநாட்
கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவுமலர்ப்பாதம
யானும் பரவித் தீர்க்கின்றே னேழுபிறப்பின் முடங்குகூன்.

ஐயடிகள்காடவர்கோனாயனார் புராணம்.

உளத்திலொரு துளக்கமிலோ முலகுய்ய விருண்டதிருக்
களத்தமுது குன்றார்தரு கனகமாற் றினிலிட்டு
வளத்தின்மலி தேழுலகும் வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினைபின் குழிவாய்நின் றெனையெடுத்தார்.

வாயிலார்நாயனார் புராணம்

மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்.

முனையடுவார் நாயனார் புராணம்.

செறிவுண்டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும் பயனுவக்குர், குறியுண் டொன்று கிலுங்குறையொன்றில்லோ நிறையுங் கருணையினால், வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர் வழிப்பறிக்கப், பறியுண் டவரெம்பழவினை நோய் பறிப்பா ரென்னும் பற்றாலே. ௬௮

கோட்புலிநாயனார் புராணம்.

மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத் தனவென்னோ
சேவதமோர் பொருளல்லா வென்மனத்து மன்றியே

நாவலர்கா வலர்பெருகு நதிகிழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினு மலர்ந்தனவால்.

## அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்.

செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத் திருமுருகன் பூண்டியினிற் செல்லும் போதிற், சுற்றாருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு, முற்றாத முலையுமையாள் பாகன் பூத முதற்கணமே யுடன்செல்ல முடியாப் பேறு, பெற்றார்தங் கழல்பரவ லடியேன் முன்னைப் பிறவியினிற் செய்ததவம் பெரியவாறே.

## மங்கையர்க்கரசியார் புராணம்.

மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம் வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி, செங்கமலத் திருமடந்தை கன்னி நாடா டென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப்பாவை, யெங்கள்பிரான் சண்பையர்கோ னருளி னாலே யிருந்தமிழ்நா டுற்றவிடர் நீக்கித் தங்கள், பொங்கொளிவெண் டிருநீறு பரப்பி னாரைப் போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே. ௭௧

## வெள்ளானைச்சருக்கம்.

அடியனேன் பிழைபொறுத்தெனை யாண்டுகொண் டத்தொடக்கினை நீக்கி, முடிவிலாநெறி தருபெருங் கருணையென் றரத்ததோ வெனமுன்னர்ப், படியு நெஞ்சொடு பன்முறை பணிந்தெழும் பரம்பரை யானந்த, வடிவ நின்றது போன்றின்ப வெள்ளத்து மலர்ந்தனர் வன்றொண்டர்.

என்று மின்பம் பெருகு மியல்பினா
லொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம். ௭௫

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவ சமய பக்தஜன சபை.

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயு நாயன்மார்த் தூய சொன்மலர்ப்
பொதிநல னுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே.

திருச்சிற்றம்பலம்.

1. சபைத்தோற்றம்.—இச்சபையானது ஆயிரவர்கள் அலர்,

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம்
ஆனிடத் தைந்துமாடும் அரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனையர்ச்சிப்பர்
ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையு முணரா ரந்தோ."

என்பதை ஒரு சிறிது மோராது பாற்கடலுட் பிறந்த மீன்கள் அப்பாலையுண்ணாது வேறுசிலவற்றை உண்ணுவது போலப் பிறவிப்பெருங்கடலினின்றும் எடுத்து முத்தித்தடங்கரையேற்றும் பதிநூலாகிய தமிழ்வேதபடன முதலியசெய்யாது வேறு பல பசு நூல்கற்று, வறிதே வாணாளை வீணாக்கி 'வாழ்த்த வாயும நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தசென்னியும் தந்த தலைவனை, சூழ்த்தமா மலர்கொண்டு தூவித் துதியாதே, வீழ்த்த வாவினையே னெடுங்காலமே.' என்னும் திருவாக்குக் கிலக்காகின்றோமே! இனிமேலாயினும் நாம யாவரும் ஒன்றுகூடி வழிபாடுசெய்து உய்தலாகுமே என்று எண்ணி, தமிழ்வேதப்பயிற்சியும் விஷயப்பயிற்சியும் செய்யும்படி 1904௵ நவம்பர்௴ 17௳க்குச் சரியான தமிழ் குரோதி௵ கார்த்திகை௴ 3௳ குருவாரம் பரங்கருணைக் கடங்கடலாகிய ஸ்ரீ சிவபெருமானது திருவருட்பிரேரபணையை முன்னிட்டு சைவ சமய பக்தஜன சபை என்னும் பெயரின் தாபிக்கப்பட்டது.

2 பெயர்.—தமக்குமேல வேறொரு ஆப்தரில்லாத அதிபரமாப்தரான ஸ்ரீசிவபெருமானது திருவருளாணைகொ